# கந்தரந்தாதி

மூலமும் உரையும்



ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,
நெ. 4,34, நயினயப்ப நாயக்கன் வீதி,
பார்க் டவுன் சென்னை

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# கந்தரந்தாதி மூலமும்,

ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வார் உரையும்.



---

உ

ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள் அருளிய

# திருப்புகழ் விருத்தியுரையுடன்.

வேண்டுவோர் வேண்டியது அளிக்கும் அருட்கடலாகிய முருகப்பெருமான் திருவடி ஞானத்தை அடைந்து, அவனது அருள் வெள்ளத்திலே முழுகி அவ்வநுபவ ஞானத்தைத் திருப்புகழ் என்னும் பெயரையுடைய தீஞ்சுவைத் தமிழ்ப் பாக்களால் வெளியிட்டருளிய அருணகிரிநாதர் பெருமை அனைவரும் அறிந்ததேயாகும். அத்தகைய பெரியாருடைய திருவாக்காகிய திருப்புகழ் கேட்போர் மனத்தையும் செவியையும் கவரத்தக்க இனிய இசை பொருந்தியுள்ளது. அதைப் படியாதார் இலர் இங்ஙனமிருத்தலின் அந்நூலுக்கு ஓர் உரை இருப்பின் அது பலருக்கும் இனிது பயன்படுமெனக் கருதி முதல் நூறு பாடல்களுக்கு விருத்தியுரை: சென்னை பச்சையப்பன் காலேஜ் தமிழாசிரியரும், செந்தமிழ்ச்செல்வி பத்திராசிரியரும், பாவலராற்றுப் படை முதலிய நூல்களின் ஆசிரியருமாகிய மணி திருநாவுக்கரசு முதலியார் அவர்களைக்கொண்டு எழுதுவித்து அச்சிடப்பட்டுள்ளது. அவ்வுரை பாடல்களின் பொருளை நன்கு விளக்கிக் காட்டுவதோடு பல அரிய நூல்களின் மேற்கோள்களுடன் விளக்குவதால் எல்லோருக்கும் மிக்க பயனைத் தருமென்பதற்குச் சிறிதும் ஐயமின்று. ராயல் பதினாறு பக்கங் கொண்ட இருபத்தாறு பாரங்களுள்ள அந்நூல் காலிகோ கட்டடம் செய்யப்பட்டுள்ளது. விலை ரூபா 2.

உ

முருகன் துணை

ஸ்ரீ அருணகிரிநாதசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# கந்தரந்தாதி மூலமும்,

ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வார் உரையும்,

[இவற்றுடன் நூல் வரலாற்றின் சுருக்கமும்,

ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளின் திருவுருவப்படமும்

சேர்க்கப்பட்டிருக்கின்றன.]

பதிப்பாசிரியர் :—

சை. ந. பாலசுந்தரம், தலைவர்,

(மஹான் சை. இரத்தின செட்டியார் பௌத்திரர்),

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,

நெ. 4/34, நயினியப்ப நாயக்கன் வீதி,

பார்க் டவுன் (P. O.), சென்னை.

திருமுருகாற்றுப்படை பரிமேலழகர் உரையைப் புதிய
முறையின்படி எழுதி அமைத்தவரும், நாமாவளி கதம்
பத்தை வடமொழி உச்சரிப்புக் கிணங்க நூதன முறை
யின்படித் தமிழில் எழுதித் தொகுத்துப் பதிப்பித்
தவரும், பல நூல்களைப் பரிசோதித்தவரும்,
மஹான் ஸ்ரீ சாது சை. இரத்தின செட்டியா
ரவர்கள் பாதசேகரருமாகிய ஸ்ரீமான் அ.
மஹாதேவ செட்டியாரவர்களால் கந்தரந்தாதி
மூலமும் உரையுமாகிய இந்நூல் புதிய
முறையின்படி அமைக்கப்பட்டு,
ஷெயாரால் எழுதப்பட்ட முகவுரையோடுங்
கூடியது.



S. N. BALASUNDARAM, Proprietor,

**SRI SADHU RATHNA SARGURU BOOK DEPÔT,**

No. 4/34, Nainiappa Naicken Street,

*Park Town (P. O.), MADRAS*

PRINTED AT

THE MANORANJINI PRESS,

SOWCARPET, MADRAS.

உ

முருகன் துணை

வேலு மயிலுந் துணை

# கந்தரநுபூதி மூலமும் உரையும்

[புதிய பதிப்பு]

ஸ்ரீ முருகப்பிரான் திருவருட் பிரசாதம் பெற்றவரும், ஸ்வாநுபூதிப் பெருவாழ்வு வாழ்ந்தவரும், திருப்புகழ் 16000 அருளிச்செய்தவரும், சதா முருகப் பெருமானையே துதி செய்துகொண்டிருப்பவரும், ஷை திருப்புகழேயன்றி வேறு துதி நூல்கள் பல அருளிச்செய்தவரும், ஸ்ரீ தாயுமான சுவாமிகள் முதலிய பல பெரியோர்களால் துதிக்கப்பட்டவருமாகிய ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் தமது சுவாநுபவத்தி லுதித்தவாறு அருளிச்செய்த கந்தரநுபூதி என்னும் நூல்: சிறியோர், பெரியோர், இன்னும் பலராலும் நெடுங்காலமாகப் பாராயணஞ் செய்யப்பட்டுவருவதும், மனப்பாடஞ் செய்யப்பட்டு வருவதும் பலர்க்கும் தெரிந்த விஷயமே. இந்நூற் பாராயணத்தால் இம்மையிலும் மறுமையிலும் முருகப்பெருமான் திருவருளால் இஷ்ட காம்யார்த்தங்களையும், காலக்கிரமத்தில் குகப்பெருமான் திருவருளால் மோக்ஷசாம்பிராஜ்யத்தையும்

அடைவதற் கேதுவாயிருப்பதோடு, இஷ்டசித்திகளையும் தர வல்லதாயிருக்கிறது. ஆதியில் இந்நூல் 51-பாடல்கள் கொண்டதாயிருந்தது. ஸ்ரீ சரவணப்பெருமாளையர் அவர்கள் காலத்திலும், இலக்கணக்கடலாக விளங்கிய ஸ்ரீ இராமாநுஜ நாவலர் அவர்கள் காலத்திலும் பதிப்பிக்கப்பட்டபிரதிகளி லெல்லாம் 51 பாடல்களே காணப்படுகின்றன. பிறகு கொஞ்சக்காலஞ் சென்றதும், பழைய ஏட்டுப்பிரதிகளில் காணப்பட்டதாகக்கூறி இன்னும் 50 பாடல்கள் சேர்த்து, 100 பாடல்கள் கொண்ட பதிப்பு சமீப காலத்தில் வெளிவந்திருக்கிறது.

ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமான் சம்பந்தமாயுள்ள சில தோத்திர நூல்களுக்கும் வேறு சில நூல்களுக்கும் புதிய முறையை யனுசரித்து உரைவெளியிட உத்தேசித்து, சமீபத்தில் திருமுருகாற்றுப்படைக்குப் பரிமேலழகருரையை அச்சிட்டு வெளிப்படுத்தியது பலர்க்குந் தெரிந்த விஷயம். இதற்குப் பிறகு கந்தரந்தாதி உரையும் நூதன முறையின்படி அச்சிட்டு முடிவுபெற்றிருக்கிறது. மூன்றாவதாக, கந்தரநுபூதி 100 பாடல்களுக்கும், மஹான் ஸ்ரீ சாது சை. இரத்தின செட்டியாரவர்கள் பாதசேகரரும், தர்க்க வேதாந்த பஞ்ச லக்ஷண வித்வத் சிரோமணியும், பல வேதாந்த சாஸ்திரங்களை வெளியிட்டவரும், லோகோபகாரி பத்திரிகைக்குச் சுமார் 12 வருஷகாலம் பத்திராதிபராயிருந்தவரும், இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்த் தலைமைப்பண்டிதரும், ஆசிரி

யருமாகிய ஸ்ரீமான் சாது. கோ. வடிவேலு செட்டியாரவர்களைக்கொண்டு உரை எழுதுவித்துப் புதிய முறையின்படி இப்போது அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கிறது. இந்நூல், இதற்கு முன் வெளியிட்ட இரண்டு நூல்களின் முறையை அநுசரித்து அச்சிடப்பட்டிருக்கின்றது. கந்தரனுபூதி மூலத்தை இதுகாறும் அச்சிட்டவர்களெல்லாம் பழைய பதிப்பிலுள்ளவாறே பாடல்களுக்குத் தலைப்புகள் கொடுத்து அச்சிட்டனர். அத் தலைப்புகள் சில விடங்களில் விளக்க மில்லாமலிருப்பதால் எல்லாப் பாடல்களுக்கும் புதியதாகவும், விவரமாகவும் தலைப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

விசேஷ உரையிலுள்ள ஒவ்வொரு விஷயங்களையும் பிரித்துத் தனித்தனி பாராவாகப் போடப்பட்டிருப்பதோடு, எத்தனை விஷயங்கள் காட்டப்பட்டிருக்கின்றனவோ அவ்வளவிற்கும் தொடர் இலக்கங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த முறையை யனுசரித்துப் பதிப்பித்திருப்பதனால் இந்நூலை வாசிப்பவர்கட்கு யாதொரு சிரமமுமின்றி விஷயங்களைச் சுலபமாகத் தெரிந்துகொள்ளுதற் கேதுவாமென்பது சொல்லாமலே விளங்கும்.

உரை முற்றும் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது.

இந் நூலுக்கு அநுபந்தமாகச் சில விஷயங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவையாவன :—

1. நிவேதன சாமான்கள் இன்னவையென்று ஒவ்வொரு பாடலுக்கும் இலக்கங்கள் கொடுத்துக் காட்டப் பட்டிருக்கின்றன.

2. ஜெபிக்க வேண்டிய உரு இத்தனை யென்பது கூறப்பட்டிருக்கிறது.

3. ஈற்றில் செய்யுள் முதற்குறிப்பு அகாராதி சேர்க்கப்பட்டுள்ளது.

4. புஸ்தகத்தின் முகப்பில் ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமான் திருவுருவப்படம் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஷை கந்தசஷ்டி உரை புதிய முறையை யனுசரித்து வெளிவருவது இதுதான் முதன்முறையாகும். இந்த விதமான முறையில் இந்நூலை இதுகாறும் எவர்களும் பதிப்பித்ததில்லை. குகப் பெருமான் திருவருள் பெற விரும்பும் ஒவ்வொருவரும் இந்நூலை வாங்கி வாசிக்கவேண்டியது அவசியமாகும்.

இதன் விலை அணா எட்டு. உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது விலை அணா. 12.

---

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,
4/34, நயினியப்ப நாயக்கன் வீதி, பார்க் டவுன் (P.O.) சென்னை.

உ

குகமயம்

வேலு மயிலுந் துணை



# முகவுரை

——:0:——

கல்வியறிவிற் சிறந்த பெரியோர்களுக்கு இதனால் தெரிவித்துக் கொள்வது யாதெனின்,

தெய்வப் புலமை நக்கீரதேவ ரருளிய திருமுருகாற்றுப்படைக்குப் பழமையாகவுள்ள பரிமேலழகருரையையே புதிய முறையி லமைத்தெழுதிக் கொடுக்க, ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தக சாலையார் அச்சிட்டு வெளியிட்டிருப்பதைப் பண்டிதர்களேயன்றி ஏனையோரும் பார்வையிட்

டிருத்தல்கூடுமென்று நினைக்கின்றேன். ஷை புஸ்தகசாலையின் அதிப ரும், எனது அத்யந்த நண்பரும், மஹான் சாதுஸ்ரீ சை. இரத்தின செட்டியாரவர்கள் பௌத்திரரும், ஸ்ரீமத் சை. ர. நமசிவாய ராஜயோகி அவர்கள் புதல்வரும், ஸதாநந்த யோகி ஔஷதசாலையின் அதிபரு மான ம-ள-ள-ஸ்ரீ சை. ந. பாலசுந்தரஞ் செட்டியாரவர்கள், "யான் ஸ்ரீஅருணகிரிநாதர் அருளிச்செய்த கந்தரந்தாதி மூலத்தை, ஸ்ரீவில்லி புத்தூரா ரருளிய உரையுடன் அச்சிடப் போகின்றேன்; அதனை எந்தவிதமாக அச்சிட்டால் நலமாக விருக்கும்?" என்று என்னைக் கேட் டுக்கொண்டார்கள். "தற்காலம் பலரும் உரைப்புஸ்தகங்களை அச்சிடுவது போன்று வரிமடக்கி அச்சிட்டால் அது பாடலின் தாத்பரியம் சுலப மாகத் தெரிந்துகொள்ளுதற் கியலாததாகும்" என்றும், "பொழிப்புரையும் வேறே போடும்படி நேரிடும்" என்றும், "இதைக்காட்டிலும் முன் வெளி யிட்ட திருமுருகாற்றுப்படை உரையை யனுசரித்து அச்சிட்டால் அது பலர்க்கும் மிகு பிரயோசனமுள்ளதாயிருக்கும்"என்றும் தெரிவித்தேன். அதற்கு ஷை எனது நண்பர் இதைப்பற்றி யோசனை செய்து, "இந்த முறையின்படி அச்சிட்டால் பாரம் அதிகம் வளரக்கூடுமே"என்று தெரி வித்தார்கள். பிறகும் இதுபற்றி யோசனைசெய்து"திருமுருகாற்றுப்படை உரைப்போக்கின்படியே அச்சிடுவது" என்றும், "உங்கள் பிரியப்போல் இதை ஒழுங்கு செய்து தரல் வேண்டும்" என்றும் கேட்டுக்கொண்டார் கள். இப் புஸ்தகத்தை நூதன முறையின்படி திருத்தும் வேலையை முற்றும் என் அபீஷ்டப்படியே ஷை நண்பர் விட்டுவிட்டமையால், எனக்கு இது விஷயத்தில் புதிது புதிதாக யோசனை தோன்றிக் கொண் டேவர, கடைசியில் இப்போது முடிந்து வெளி வந்துள்ளவாறு முடித் தல் நேர்ந்தது. ஒரு வேலையில் பிரவேசிப்பவரை "இப்படித்தான் செய்ய வேண்டும்" என்று கட்டு திட்டம் செய்தால் உற்சாகம் குறைந்துபோ

மென்பது பலர்க்கும் தெரிந்த விஷயம். என் பிரியப்படியே விட்டு விட்டமைபால்தான் யான் பலவகையில் யோசனை செய்து புதிய முறையின்படி நூலை அமைத்தல் நேர்ந்தது; இன்றேல், பழைய பதிப்பில் உள்ளதுபோல் பார்த்துக் கொடுத்துவிட வேண்டியதேயாம்.

ஷை எனது நண்பர் இது விஷயத்தில் பின் வாங்காது தாராளமாக உத்தரவு கொடுத்தமைக்காக யான் அவர்க்கு நன்றிகூறக் கடமைப் பட்டுள்ளேன். இப் புஸ்தகத்தைப் படித்துப் பார்க்கும் அன்பர்கள் எவ்வளவு சந்தோஷ முறுவார்கள்? இவ்வளவுக்கும் காரணமா யிருந்தது ஷை நண்பரவர்களுடைய தாராளமான உத்திரவே. இது விஷயத்தை யான் உள்ளபடியே கூறுகின்றேன்; முகஸ்துதியாகக் கூறவரவில்லை. சந்தோஷ மிகுதியினால் அவ்வாறு கூறுமாறு நேரிட்டது. நிற்க.

ஷை பதிப்பு எந்த விதமாக அனுசரிக்கப்பட்ட தென்பதைப்பற்றிச் சில விஷயங்கள் கூறவேண்டி யிருக்கின்றன. அவையாவன:—

இதற்கு முன் இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்திய பலரும் பழைய உரையில் எவ்வாறு இருந்ததோ அவ்வாறே அச்சிட்டிருக்கின்றார்கள்; அம்மாதிரி விட்டுவிடுவதற்கு எனக்குச் சிறிதும் பிரியம் உண்டாகவில்லை. பழைய உரையின் அமைப்பானது ஒவ்வொரு பாடலிலும் உள்ள பத வரிசையின்படியே உரை அமைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பாடலையும் அன்வயப்படுத்திப் பொருள் முடிபிற்கேற்றவாறு விஷயங்களை அமைத்தால் அது படிப்பவர்களுக்கு ஒவ்வொருபாடலிலும் அமைந்திருக்கும் விஷயங்கள் மிகத் தெளிவாக விளங்குதற்கேதுவாகும். பழைய உரையில் இந்த முறையை அனுசரிக்காமையால், சிற்சில இடங்களில் பொருட்பொருத்தம் நன்றாகத் தெரிந்துகொள்ள வியலாமல், மயக்கங் கொடுத்தற்கு ஏதுவான விதமாய் உரை அமைந்துள்ளது.

இந்த விஷயத்தின் உண்மை: பழைய பதிப்பையும் இப்போது வெளிவந்திருக்கும் புதிய பதிப்பையும் வைத்து உள்ளபடியே ஒத்திடு பவர்களுக்கு நன்கு விளங்கும். ஒவ்வொரு பாடலிலும் இவ்வாறு திருத்தும்படி நேர்ந்தது. இவ்விதம் கூறுவதால், "பழைய உரையை ஏதேனும் மாற்றிவிட்டிருக்கக்கூடுமோ" என்று சிலர்க்குச் சந்தேகம் தோன்றுதல்கூடும். உரையில் இவ்வித மாறுபாடு யான் ஏதும் செய்யவில்லை யென்பதை இங்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

யானோ வித்வானல்லன். ஏற்கெனவே திருமுருகாற்றுப்படை முக வுரையிலேயே இதுபற்றிக் கூறியுள்ளேன். அதையே ஈங்கும் விளக்கிக் கூறுவது மிகைபடக் கூறுவதாகும். என்னுள் தோன்றிய பக்தி காரணமாக இவ் விஷயங்களில் யான் பிரவேசிக்குமாறு நேரிடு கிறது. என்போன்ற சிறிது படிப்புள்ளவர்களும் நூலைப் படித்த மாத் திரத்திலேயே சந்தேக விபரிதங்கட் கிடங்கொடாதவாறு விஷயங்களைத் தெரிந்துகொள்ளவேண்டு மென்பதே எனதபீஷ்டம். அதுபற்றியே இவ்வாறு துணிந்து செய்யுமாறு நேர்ந்தது. புதிய முறையை யனுசரித்து உரையை ஒழுங்கு செய்துகொண்டு வந்ததில் அதிக சிரமத்திற்கு இட முண்டாயிற்று.

"பழைய பதிப்பி லுள்ளவாறு அச்சிடுவதைவிட்டு என் இவ்வாறு குயுக்தி செய்து அச்சிடவேண்டும்? ப்ரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாயர் சாமிநாதையரவர்கள் முதலிய பெரியோர்கள், பலர் பழைய பதிப்பின் படியே அச்சிடவில்லையா?" என்று சிலர் வினு நிகழ்த்துதல் கூடும். அதற்குப் பதில் யான் தெரிவிப்பதாவது:—

பிரபஞ்ச முற்றும் வியாபித்திருக்கும் மஹா சக்தியானது ஒவ் வொருவருள்ளத்திலும் வியாபித்து இன்னின்னவிதமாகக் காரியத்தைச் செய் என்று தூண்டுதல் செய்ய அதன்படி அவரவர்கள் தங்கள் காரியங்

களை முடித்துக்கொள்ளுகிறார்கள். ஶ்ரீ மஹா சக்தியே என்னுள்ளத்தின் கண் புகுந்து 'இவ்விதம் செய்' என்று என்னை நியமனம் செய்ய அதன்படி யான் இக்காரியத்தை முடிக்காநின்றேன். ஒருவருக்குள்ள யோசனையைப்போல் இன்னொருவருக் கிருக்கின்றதோ? ஒருவருக்கு நல்லதென்று தோன்றுகிறது இன்னொருவருக்குக் கெட்டதெனப் புலப்படுகின்றது. எல்லோரையும் திருப்திகரம் செய்துவைத்தல் சாத்தியமாமா? அதனோடு கால நிலைமையையும் யோசித்தல்வேண்டும்.

பண்டைக் காலத்து எட்டுப் பிரதிகளில் ஒற்றெழுத்துக்களுக்குப் புள்ளி யில்லாமலே எழுதியிருக்கிறார்கள். அக்காலத்திலுள்ளார் அதைக் குற்றமாகப் பாராட்டாமல் சரியாகவே வாசித்துக்கொண்டார்கள். பிற் காலத்தில் கொஞ்சம் நாகரிகம் முதிரவே ஒற்றெழுத்துக்களுக்குப் புள்ளி போடும் ஏற்பாட்டை வைத்துக்கொண்டார்கள்.

ஆதியில் இந்த யுக்தி எவருக்கேனும் ஒருவருக்குத் தோன்றி யிருத்தல்வேண்டும்; அவர், புள்ளி போட்டு எழுதும் ஏற்பாட்டை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்திருத்தல் வேண்டும். பிறகு அது பலருக்கும் நன்றெனத் தோன்றி எல்லோருடைய அனுஷ்டானத்திலும் வந்திருத்தல் வேண்டும். பிறகு இன்னுஞ் சிலகாலஞ் செல்லவே, அச்சு நாகரிகம் முதிரவே வசன பாகங்கட்கு ஆங்கிலேயருடைய ஏற்பாட்டை அனுசரித்து, வாசகக் குறிகள் அமைத்துக்கொண்டார்கள். இதுவும் ஆதியில் எவருக்கேனும் தோன்றியிருக்கவேண்டும். பிறகு அதனை யனுசரித்துப் பலரும் அந்த ஏற்பாட்டைக் கொஞ்சங் கொஞ்சமாக அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்திருத்தல் வேண்டும். இந்த விதமான ஒவ்வொரு மாறுபாட்டுக் கிடையிலும் எத்தனையோ வருஷங்கள் கடந்திருக்கவேண்டும். நெடுங்காலமாக வசன பாகங்கட்குமட்டுமே வாசகக் குறிகள் அமைக்கப்பட்டு வந்தன. செய்யுள் பாகத்திற்கு

இந்த எற்பாடு அனுஷ்டானத்திற்குவாராமலேயிருந்தன. பிறகு கற்றுவல்லோர்களிற் சிலர், ஆங்கிலேயச் செய்யுள் நூல்களை யனுசரித்து, தமிழ்ச் செய்யுட்களில், ஆரம்ப காலத்தில், வேறுவிதமாகப் பொருள்படக்கூடிய சந்தர்ப்பங்களில், இன்றியமையாத இடங்களில், சந்தி பிரிப்பது என்ற எற்பாட்டை வைத்துக்கொண்டார்கள். பின்னும் சிலகாலம் செல்லத்தளை கெடாதவாறு செய்யுட்களில் சந்தி பிரிக்கும் எற்பாட்டை அதிகமாக அநுஷ்டிக்கத் தொடங்கினர்கள். ஆதிகாலத்தில் பலமாக ஆட்சேபித்த வித்வான்களும் வெகு ஜனங்களுடைய நோக்கத்தை யனுசரித்துப் பழைய தங்கள் அபிப்பிராயத்தினின்றும் மாறி தாங்களும் அந்த எற்பாட்டைச் சிறிது சிறிதாக அனுஷ்டானத்தில் வைத்துக்கொண்டார்கள்.

மேற் குறிப்பிட்ட ஒவ்வொரு எற்பாடும் நாளாவட்டத்தில் சிறிது சிறிதாகவே அனுஷ்டானத்தில் வந்திருத்தல்வேண்டும். இன்னும் சில காலஞ் செல்லவே, செய்யுட்களில் மூன் சில இடங்களில் சந்தி மாத்திரம் பிரித்த எற்பாடோடு நில்லாமல், அச்சு நாகரிக முதிர்ச்சிக் கேற்கவும், கல்வி முதிர்ச்சிக் கேற்கவும் செய்யுட்களிலும் வாசகக்குறிகளையும் முற்றும் வழங்க ஆரம்பித்துவிட்டார்கள். இக்காலத்தில் இவற்றை எவரேனும் ஆக்ஷேபித்துத் தள்ளுவதுண்டோ? வெகு ஜனங்களுடைய போக்கு இவ்விதமிருக்கும்போது சிலருடைய பழைய எற்பாடு நிலை பெற்றிருக்க முடியுமோ? அன்பர்காள்! இப்போது நடைபெற்றுவரும் உலகானுபவத்தைக்கொண்டும், தத்தமது யுக்தியைக்கொண்டும் மனசாட்சிக்கு விரோதமில்லாமல் இவற்றையோசித்தல்வேண்டும்.

ஒரு காலத்தில் நன்மையாகக் காணப்பட்ட எற்பாடு பின்னொரு காலத்தில் வேறு விதமாக மாறிவிடுகிறது. இது ஒவ்வொருவருக்கும் அனுபவபூர்வமாகத் தெரிந்ததொரு விஷயமாம். இதற்குச் சரித்திர பூர்வ

மாகத் திட்டாந்தங் காட்டுவதென்றல் இம் முகவுரை மிக நீண்டுவிடும்; இதுவே ஒரு தனி நூலாகவும் முடியும். ஒரே ஒரு திருஷ்டாந்தம் இவ்விடம் காட்டலாம். திருவெண்காட்டடிகளென்னும் பட்டினத்துப் பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய கச்சித்திருவகவலைப் படித்தால் இதற்குச் சமாதானம் ஏற்படும். இதைக் காட்டிலும் சிறந்த திட்டாந்தம் வேறு வேண்டியதின்று. நிற்க.

ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகமானது உலகமெல்லாம் கொண்டாடக்கூடியதொரு நூலாக இருக்கின்றதன்றோ? இப்படிப்பட்ட மஹா சிறப்புவாய்ந்த நூலுமன்றோ இக்காலத்தில் சந்தங்கெடாதவாறு சந்திபிரித்தச்சிடப்பட்டிருக்கின்றது. இப் பதிப்பைப் பலரும் விரும்பி ஏற்றுக்கொண்டார்கள். இதைக் காட்டிலும் வேறு அத்தாட்சியும் வேண்டுமோ? இன்னும் சிலகாலம் செல்லச் செல்ல நமக்குப் பிற்காலத்தில் இன்னும் எந்தெந்த விதமான நாகரிகமெல்லாம் ஏற்பட இருக்கின்றனவோ? இவற்றை யாவர் அறிந்து சொல்லல்கூடும்?

ஸ்ரீ சாந்நலிங்க சுவாமிகளருளிய நூல்களுக்கும் பிறவற்றிற்கும் ஷை ஸ்வாமிகள் சிஷ்யர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் திவ்யமான உரை அருளிச் செய்திருக்கின்றனரன்றோ? ஷை உரைநூல்களுள் ஒழிவிலொடுக்கம் என்னும் நூல் பதிப்புக்கு வந்தபோது, நூல் முற்றுமுள்ள கடினமான சந்திகளையெல்லாம் பிரித்து, எல்லோருக்கும் பொருள்விளங்குமாறு பழைய உரையே சுலப நடையில் அச்சிட்டு வெளிவந்திருப்பது பலருக்கும் தெரிந்த விஷயந்தானே. இதுபற்றியும் எவரேனும் ஆக்ஷேபித்ததுண்டோ?

தமிழ் நூற்களுள் பெரும்பாலன மிகக் கடின சந்தியோடு கூடியிருத்தலை முன்னிட்டு மிகச் சிறந்த பண்டிதரொருவர் தாம் ஒரு நூலுக்கு எழுதிய முகவுரையின் ஓர் பாகத்தில் "சந்திப் பிடுங்கல் பெரும் பிடுங்கலாக இருக்கிறது" என்று குறிப்பிட்ட வாசகத்தைப்

பார்த்திருக்கின்றேன். இந்தச் சந்தர்ப்பம் எதற்காக இங்குக் கூறும்படி நேர்ந்ததென்றால், இந்தக் கந்தரந்தாதி உரையிலும், சிற்சில இடங்களில் கருத்துரையிலும், மிகு இலக்கண அமைதியோடுங்கூடிய பாகங்களில் கடினமான விடங்களிலும், சந்தி பிரித்துக் காட்டியிருக்கின்றேன். இந்நூலை வாசிக்கும் அன்பர்கட்கு எந்த வகையிலும் கஷ்டந் தோன்றாதிருக்கும்பொருட்டு இன்றியமையாத விடங்களில் சந்தி பிரித்திருக்கின்றேன். அன்பர்கள் இதையொரு குற்றமாகப் பாராட்டமாட்டார்களென்று எண்ணுகிறேன்.

காலம் செல்லச்செல்ல, கல்வி அறிவு முதிர்ந்துகொண்டு வரவர, நாகரிகம் மிகுந்துகொண்டேபோகும், இதைத்தடுத்தல் எவராலும் முடியாத காரியம். காலச்சக்கரத்தின்படியே எதுவும் நடந்துகொண்டுபோம். பழைய ஏற்பாட்டையே இப்போதும் வைத்துக்கொண்டு பிடிவாதம் சாதிப்பதில் எதும் பிரயோசனமில்லை. காலநிலைமைக் கேற்றவாறும், வெகு ஜனங்களுடைய மனோ நிலைமைக் கேற்றவாறும் விஷயங்களைக் கூடிய வரையில் திருத்திக்கொள்ளல்வேண்டும். கால நிலைமைக் கேற்றவாறு சம்பவங்கள் மாறிக்கொண்டேவருகின்றன. இவ் வுண்மையினை சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் மிகு நன்றாக விளக்கிக் காட்டியுள்ளார்கள்.

சில காலம் சமணர்களுடைய ஆட்சி நடந்ததென்றும், சிலகாலம் சைவவைஷ்ணவ சண்டையில் கழிந்ததென்றும், சில காலம் இலக்கண விவாதத்தில் கழிந்ததென்றும், சிலகாலம் துவைத அத்வைத வாதத்தில் கழிந்ததென்றும் கூறுகின்றனர். இப்போது நடைபெற்றுவருவது நாடக—நாவல் காலம். பெரும்பாலாருடைய புத்தி இதிற் சென்றிருக்கின்றது. இக்காலத்தில் பக்தியோடு புராணங்களைப் படிப்போரும், புராண ஆராய்ச்சி செய்வோரும் உண்டோ? சமயநூல்களையும் ஸ்துதி நூல்களையும் வாசிப்பவருண்டோ? நூற்றுக்கு எத்தனைபேர் தேருவர்?

பலவிதமான கதைப் புஸ்தகங்கள் படிப்பதிலேயே பலர்க்குக் காலம் கழிகின்றனவே. காலைமுதல் மாலைவரையில் லௌகிகத்திற் சென்ற நேரம்போக மிகுதி நேரத்தையும் நாவல்களை வாசிப்பதில் காலத்தைக் கழிப்போர்க்கு, சமய நூல்களையும் பக்திமார்க்கத்திற் குரிய நூல்களையும் வாசித்துத் தெய்வ அருளுக்குப் பாத்திரமாகும் நாள் எந்த நாள்? வித்வான்களுடைய மனப்போக்கும் நாவல் ஆராய்ச்சியிலும், நாவல்கள் நாடகங்கள் எழுதுவதிலும் செல்கின்றனவே.

இதனால் நாவல்களையாவது, நாடகங்களையாவது, இதர கதைப்புஸ் தகங்களையாவது படித்தல் கூடாதென்று சொல்ல வந்தோமில்லை. காலத் துக்காலம் எந்தெந்த விதமாக நம்மையு மறியாமல் காரியங்கள் நிகழ்ந்து கொண்டுவருகின்றன என்பதை நிரூபிக்கும் பொருட்டே ஷை விஷயங் களை விளக்கிக் காட்டவேண்டிய சந்தர்ப்பம் நேரிட்டது; நிற்க.

சாஸ்திரங்களில் 'சார்ந்ததன் வண்ணம்' என்று கூறப்படுவதுண்டு. ஒருவன் பக்தி நூல்களை வாசித்துக் கொண்டுவந்தால் பக்திமானாக விளங்குகிறான். கதைப்புஸ்தகங்களைப் படிப்பதிலேயே காலத்தைக் கழிப்பவன் மனம் முற்றும் உலக நாட்டத்திலேயே, உலக போகபாக்கி யங்களை அனுபவிப்பதிலேயே சென்றுவிடுகிறது; இதனால் அவன் மனம் தூய்மையற்றுப் போவதோடு, தெய்வ அருளுக்கும் பாத்திரவானாகாது போகின்றான். ஸ்படிகத்திற்கு நிறம் வெண்மை. அதனில் எந்த நிறம் பிரதிபலிக்கின்றதோ அந்த நிறமாக அது விளங்குதல் கண்கூடு. நிற்க.

பவணந்திமுனிவர் தாமியற்றிய நன்னூலின் ஓரிடத்தில், "பழை மன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையி னானே," என்ற புறனடைச் சூத்திரமொன்று காலநிலைமையை நன்கு யோசித்துக்

கூறியிருக்கின்றானன்றோ? மேற் காட்டிய விஷயங்கள் யாவும் இச் சூத்திரத்தில் ஐக்கியமாகும். நிற்க.

இனி, கந்தரந்தாதி நூலாசிரியராகிய ஸ்ரீ அருணகிரிநாதரைப்பற்றிச் சிறிது கூறவேண்டியவனாயிருக்கின்றேன். ஷை சரித்திரத்தைப்பற்றிப் பலர் பலவிதமான அபிப்பிராயங்களை வெளியிடுகின்றனர். ஒருவர் ஆம் என்று ஸ்தாபிப்பதை இன்னொருவர் அல்லவென்று ஸ்தாபிக்கிறார். ஒருவர் அல்லவென்று கூறுவதை மற்றொருவர் ஆம் என்று நிரூபிக்கிறார். இவற்றுள் 'இதுதான் நிச்சயம்' என்று எவ்வாறு துணிந்து கூறுவது? ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கட்சிகளைத் தாபித்தற்பொருட்டுப் பலமான அத்தாட்சிகள் பல காட்டுகின்றனர். இவற்றுள் எதை நிச்சயமென்று கொள்வது? எதை அபத்தமென்று தள்ளுவது? சில வருடங்களுக்கு முன் ஸ்ரீமான் மணமங்கள ரவர்கள் அருணகிரிநாதர் சரித்திரம் என்று சிறு நூல் ஒன்று வெளியிட்டனர். இந்நூல் இப்போது கிடைப்பது அரிதாயிருக்கிறது. சமீபகாலத்தில் ஸ்ரீ நடராஜ பக்த ஜன சபையார் அருணகிரிநாதர் சரித்திரத்தை அச்சிட்டு வெளியிட்டார்கள். ஷை இரண்டு பதிப்புக்களிலும் பல வித்தியாசங்கள் காணப்படுகின்றன. இன்னும் சில பண்டிதர்கள் ஷை சரித்திரத்தை ஆராய்ச்சி மூலமாக வெளியிட்டுள்ளார்கள். இப்போது பலமாக வாதிப்பவர்களுள் எவரும் ஷை ஸ்வாமிகளை நேரில் கண்டவரல்லர். முன்னோர் எழுதிவைத்த சரித்திரக்குறிப்பைக் கொண்டும், சில சாஸனங்களைக் கொண்டும், கர்ண பரம்பரையாக வழங்குவதை யனுசரித்தும், தங்கள் யுக்தியைக் கொண்டும் பலர் பலவிதமாகத் தம்மபிப்பிராயத்தை வெளிப்படுத்துகிறார்கள். இவற்றுள் எதனை எவ்வளவு வரையில் உண்மையென்று கொள்ளுவது? எவ்வளவு வரையில் அபத்தம் என்று தள்ளுவது? இந்த விஷயம் நீண்ட வாதத்திற் கிடந்தரக்கூடியதாம். இந்த விஷயங்களுள் இதுதான் உண்மை என்று எவரும் துணிந்து கூறுதற் கிடமில்லை. எல்லாம் யூகமேயாம்.

ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தரவர்கள் தாம் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரைச் சந்தித்து உபதேசம் பெற்றுக்கொள்வதற்கு முன், மத விஷயங்களில் தமக்குப் பெருத்த சந்தேகங்கள் தோன்றினமையால், அக்காலத்தில் மிகப்பிரசித்தி பெற்று விளங்கியிருந்த சில மதாசாரியர்களை நேரில் கண்டு, ஒவ்வொருவரிடமும், "நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா? எனக்குக் கடவுளைக் காட்டக்கூடுமோ?" என்று கேள்விகள் கேட்டதாகவும், ஒவ்வொரு மதவாதியும், "யான் கடவுளை நேரில் பார்த்தது கிடையாது" என்றும், "எங்கள் மத சாஸ்திரங்கள் அவ்வாறு கூறுகின்றன" என்று கூறினரென்றும், பிறகு அவர்களை விட்டு நீங்கி ஷை பரமஹம்சர் அவர்களிடம் சென்று அதே கேள்வியைக் கேட்க, அவர் புன்சிரிப்புக்கொண்டு, "நான் கடவுளைக் கண்டிருக்கிறேன்; நான் உனக்குக் கடவுளைக் காட்டல் கூடும்", என்று ஸ்வாமிகள் தெரிவித்தாரென்றும் ஷையார் சரிதநிரத்தில் கூறப்பட்டிருக்கின்றன. ஷை ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரைப்போன்று அகண்ட ஞானம் வாய்க்கப்பெற்றவர்கள் எவரேனு மிருந்தால் அன்னோருக்கு ஒவ்வொன்றின் யதார்த்தமும் தானே விளங்கிவிடும். அப்படிப்பட்டவர்கள் கூறுவதை முற்றும் சிறந்த பிரமாணக் கொண்டுவிடலாம். ஆதலால், இக்காலத்தில் பலர் கூறும் விஷயங்களைப் பொறுமையாக ஆராய்ச்சி செய்து, யுக்திக்கும் உலகானுபவத்திற்கும் எவ்வளவு தூரம் பொருந்தியிருக்கின்றதோ அவ்வளவுவரையில் ஒப்புக்கொள்ளலாம்.

"ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள் தமது சிறு வயதில் அதிகமாகச்சிற்றின்பத்தில் காலத்தைக்கழித்தார்" என்றும், "பிறகு ஸ்ரீமுருகப் பெருமா திருவருளால் அவர்க்கு ஞானம் கைகூடிவந்தது" என்றும் பலர்கூறுகின்றனர். வேறொருவர், "ஸ்வாமிகள் சிற்றின்பத்தில் நடமாடியதாகக் கூறுவது தோஷம்" என்று ஸ்தாபிக்கிறார். ஷை இருவிதமான அபிப்பிராயங் கொண்டவர்களில் எவரும் சுவாமிகளை நேரில் தரிசித்தவரல்லர். அவ்வாறிருக்க, எவர் சொல்வது மெய்? எவர் சொல்வது பொய் என்று

சொல்வது? ஆகையால், இந்த ஆராய்ச்சியில் அவ்வித வாதங்களுக்கு இடமில்லாதபடி நூல் வந்த வரலாறு மிகச் சுருக்கமாகக் காட்டப்பட்டுள்ளது. முற்றும் விஷயங்கள் தெரிய விரும்புவோர், சரித்திர நூல்களையும், மற்றும் பலர் இபற்றியுள்ள ஆராய்ச்சிக் குறிப்புக்களையும் பார்வையிட்டுக் கொள்ளலாம். இந்த விஷயத்தை இவ்வளவோடு நிறுத்துகிறேன். மேற்காட்டிய நியாயப்படியே ஸ்ரீ வில்லிபுத்தூரார் சரித்திரமும் வழங்கப்படுகிறது. இச் சரித்திரத்திலும் கட்சிகள் இல்லாமற் போகவில்லை. இந்நூலில், நூல் வெளி வந்த விதமும், உரை வெளி வந்த விதமும் சுருக்கமாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

இந்நூல் அச்சிட்டு முடிந்த பிறகு ஓரிடத்தில் ஓர் பெரும் பிழை காணப்பட்டது. இப்பிழை என் மனதறிய ஏற்பட்டதன்று. ப்ரூப்பில் யான் ஒரு விதமாகத் திருத்திக் கொடுக்க, அச்சாபீஸார் அதை வேறு விதமாகப் பாவித்துத் திருத்திவிட்டார்கள். அதனால் இன்ன பதமென்று சொல்லக்கூடாதவகையில் ஷை பதம் அமைந்திருக்கின்றது; கருத்துரையில் அந்தப் பதம் சரியாக அமைந்திருக்கின்றது. அதன்படி அதைத் திருத்திக்கொள்ளுமாறு அன்பர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நிற்க,

இந்நூலில் என்னையு மறியாமல் ஏதேனும் பிழை நேர்ந்திருந்தால் தயவு செய்து அதைத் திருத்திக்கொள்ளுமாறு அன்பர்களைப் பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலுக்கு முகவுரை யொன்று எழுதித் தருமாறு இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்திய எனது நண்பர் கேட்டுக்கொண்டார். அவர் அபீஷ்டப்படி சுருக்கமாக முகவுரையை எழுதுவதாகத் தீர்மானித்திருந்தேன். பிறகு முகவுரையை எழுத ஆரம்பித்ததும், ஊற்றுப்போல் பல விஷயங்கள் மேன்மேலும் என் புத்தியில் தோன்றிக்கொண்டே வந்தன. அந்த அபிப்பிராயங்களுள் ஒன்றையும் விடாமல் எழுதிக்கொண்டு

வந்ததால் இம் முகவுரை அளவு கடந்து பலவித ஆராய்ச்சிகளோடு கூடிய வியாசரூபமா யமைந்தது. இம்மாதிரி முடியு மென்று யான் சிறிதும் நினைக்கவில்லை. அறிவிற் சிறந்த பெரியோர்களே இதைக் குற்றமாகப் பாராட்டாமலிருக்குமாறுபிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடியேனை இம்மாதிரி காரியங்களில் பிரேரேபிக்கும்படி தூண்டிய எல்லாம் வல்ல பரம்பொருளினை யடிகளையும், எனது சற்குருமூர்த்தியின் பாதகமலங்களையும் மனமொழி மெய்களாற் றுதித்து இவ் விஷயத்தை இவ்வளவோடு நிறுத்துகின்றேன். சுபம்.

திருவொற்றியூர்,
14-10-1921.

இங்ஙனம்,
☞ அ. மஹாதேவ செட்டி.

———:o:———

உ

முருகன் துணை

வேலு மயிலுந் துணை

# கந்தரந்தாதி மூலமும் உரையும்.

## இவற்றின் வரலாறு.

---

"வில்லிபுத்தூராழ்வார் திருமுனைப்பாடி நாடாகிய நடு நாட்டில் சனியூரிலே வைணவப் பிராமணராகப் பிறந்து வட மொழி தென்மொழிகளில் வல்லராய் விளங்கியிருப்பதை வக்கபாகையென்னு மூரிலே கொங்கர் குலத்து வரபதியாட் கொண்டான் என்னும் அரசன் கேள்வியுற்று, வரவழைத் துப் பார்த்து அவரைத் தனது ஆஸ்தான பண்டிதராக அமைத்துக்கொண்டனன். அவன் தனக்கும், இவர்க்கும் பெரும் புகழ் நிலைத்திருக்கும்படி ஸ்ரீ வியாஸ பாரதத்தை விருத்தப் பாக்களாக வியற்றும்படி கேட்டுக்கொண்டமை யின், பாரதம் இவராற்பாடப்பட்டது" என்பது சிலர் மதம்.

வில்லிபுத்தூராழ்வார்க்கும் அவர் தம்பிக்கும் தாய பாகம் ஏற்படாமையால், அவர்கள் அரசன்பால் விவாதித் துச் செல்ல, அரசன் ஆழ்வாரது கல்வி வல்லபத்தை அறிந்தவனாகலின், 'இவர்க்குப் பொருள் விருப்புள

தாயிற்றே; இதனை ஒருவாறு தணியச் செய்யவேண்டும்' என்று கருதி, "நீர் பாரதத்தைச் செய்யுளாக்கிக் கொண்டு வந்த பின்னரே உமது வியாச்சியத்தை விசாரிப்பேன்" என, இவர் ஷெ மஹாபாரதத்தைப் பாடி முடித்துத் தம் முள்ளே மனமடங்கினர்; பின் இருவரும் மனமொத்தனர்" என்பது ஒருசாரார் மதம்.

"குட்டுதற்கோ பிள்ளைப்பாண் டியனிங் கில்லை குறும்பி யள வாக்காதைக் குடைந்து தோண்டி, யெட்டின மட் டறுப்பதற்கோ வில்லியில்லை யிரண்டொன்றாந் தலை முடிந்தே யிறங்கப் போட்டு, வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்தனில்லை......................................................"

என்று சிலர், இவர் தம்மை யெதிர்த்துத் தோற்ற புலவர்களது காதினைத் தமது கையில் வைத்திருக்கும் துறட்டாலே தோண்டி யறுத்தெறிபவ ரென்ப.

அருணகிரிநாதர்—திருவண்ணாமலையிலிருந்த ஒரு உருத்திர கணிகைக்குப் புத்திரராகத் தோன்றினவர்.

இவர் தமது இளமைப் பருவத்திலேயே தமது தாயார் இறந்தமையின், தமது சகோதரியிடம் வளர்ந்து ஸ்ரீ குமாரக் கடவுளின் திருவருட்பிரசாத பலத்தால் தம்மில் ஒப்பாரு மிக்காரு மின்றிச் சந்தக்கவி பாடுதலில் வல்லுவராய் ஸ்ரீ அருணாசலத்தில் எழுந்தருளியிருந்தனர்.

அப்போது யாத்திரை வாசமாகச் சென்றுகொண் டிருந்த ஷெ வில்லிபுத்தூராழ்வார் பல புலவர்களை வென்று

கொண்டு திருவண்ணுமலையை யணுகி ஆங்கிருந்த சந்தப் புலவரும், முருகக்கடவுளின் வரப்பிரசாதியுமாகிய ஷை அருணகிரிநாதரை எதிர்த்து, பிரபுடதேவராஜனது விருப்பின்படி அவரோடு வாது செய்தனர்.

அருணகிரிநாதர் வில்லிபுத்தூராழ்வாரை நோக்கி, "இப்போது நான் செய்யும் நூலுக்கு நீர் பொருளுரைக்க" என்று கந்தரந்தாதி என்னும் நூலைப் பாடிவந்தனர். ஆழ்வார் ஷை நூலுக்குப் பொருள் சொல்லிக்கொண்டே வந்து, ஷை நூலின் 55-ம் பாடலாகிய தகர விகற்பத்தானுய பாடலைக் கூறியபொழுது ஷை செய்யுட்குப் பொருள்கூற வியலாது தோல்வியுற்று, தம்மிடம் தோற்றவர் காதுகளைத் தாம் அரிந்துகொண்டுவந்த தமது கைத்துறட்டை அவர் கையிற் கொடுத்தனர்.

அருணகிரிநாதர், "உம்முடைய காதை யறுத்தெறிவதால் எனக்கும் பிறர்க்கும் ஒரு பயனுமின்று. அதனை அறுக்கவேண்டாம்; இனி நீர் ஒருவர் காதையும் அறுக்காமையே யான் விரும்புகின்றேன்" எனக் கூறி விடுத்தனர்.

'வில்லிபுத்தூராழ்வார் அருணகிரிநாதரிடம் தோற்றனர்' என்பது சைவர் கொள்கையும், 'அவர்கள் ஒருவரோடொருவர் வாதித்ததில்லை' என்பது வைணவர் கொள்கையுமாம்.

---

உ

குகன் துணை

ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிச்செய்த

# கந்தரந்தாதி மூலமும்,

## ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வார் அருளிய உரையும்



காப்பு

வாரணத் தானை யயனைவிண் ணோரை மலர்க்கரத்து
வாரணத் தானை மகத்துவென் றோன்மைந் தனைத்துவச
வாரணத் தானைத் துணைநயந் தானை வயலருணை
வாரணத் தானைத் திறைகொண்ட யானையை வாழ்த்துவனே.

(பதவுரை) வாரணத்தானை = அயிராவதத்தையுடைய இந்திரனையும்
அயனை = பிரமாவையும்
விண்ணோரை = தேவர்களையும்
மலர்க்கரத்து = தாமரைமலர் போன்ற கையில்
வாரணத்தானை = சங்கையுடைய விஷ்ணுவையும்

| | | |
|---|---|---|
| மகத்து | = | (தக்கனது) வேள்வியில் |
| வென்றோன் | = | (வீரபத்திர முகூர்த்தங்கொண்டு) செயித்தவனாகிய பரமசிவனது |
| மைந்தனை | = | புதல்வனும் |
| துவச வாரணத் தானை | = | கோழிக் கொடியையுடைய குமாரக் கடவுளை |
| துணை நயந்தானை | = | தம்பியாக விரும்பியவனும் |
| வயல் | = | பழனஞ் சூழ்ந்த |
| அருணை | = | அருணாசலத்தில் |
| வாரணத்தானை | = | கயமுகாசுரனை |
| திறை கொண்ட | = | வெற்றி கொண்ட |
| யானையை | = | யானைமுகனுமாகிய கணபதியை |
| வாழ்த்துவன் | = | (யான்) வணங்குகிறேன். |

யான் - தோன்றா எழுவாய், வாழ்த்துவன் - பயனிலை. ஏகாரம்-ஈற்றசை.

(கருத்துரை) தக்கனது வேள்வியில் இந்திரன்—பிரமா—விஷ்ணு—விண்ணோ ரிவர்களை வீரபத்திர முகூர்த்தங்கொண்டு வென்ற பரமசிவன் மைந்தனும், குமாரக்கடவுளுக்குத் துணைவனும், கயமுகாசுரனை வென்றோனுமாகிய அருணகிரியில் வீற்றிருக்கும் யானைமுக விநாயகனை யான் வணங்குகின்றேன். (க)

இதுவுமது

உண்ணா முலையுமை மைந்தா சரணம் பாருயிர்சேர்
உண்ணா முலையுமை மைந்தா சரண மருணை வெற்பாள்
உண்ணா முலையுமை மைந்தா சரணந் தனமு மொப்பில்
உண்ணா முலையுமை மைந்தா! சரணஞ் சரணுனக்கே.

| | | |
|---|---|---|
| (ப-ரை) | உண் | = (கன்றுகள்) உண்ணும் |
| | ஆ | = பசுக்களையுடைய |
| | முலை | = முல்லை நிலத்திற்கு |
| | உ | = இறைவனாகிய விஷ்ணுவினது |
| | மை | = மேக நிறத்தையும் |
| | மைந்து | = வலிமையையும் |
| | ஆசு | = (உவர்ப்பாகிய) குற்றத்தையு முடையதாய் |
| | அரண் | = காவலாயிருக்கிற |
| | அம்பார் | = சமுத்திரத்திலிருந்த அசுரரது |
| | உயிர் சேர் | = ஆவியை மாய்த்து |
| | உள் | = தேவர்கள் மனத்திருந்த |
| | நாம் | = அச்சத்தை |
| | உலையும் | = கெடுத்தருளும் |
| | ஐ | = சுவாமியே! |
| | மை | = ஆட்டு வாகனத்தை |
| | தா | = ஏறும் |
| | சர் | = (உஷ்ணத்தையுடைய) அக்கினி |
| | அண் | = சேர்ந்திருக்கும் |
| | நம் | = நாமடைக்கலம் புகுதற்கிடமாகிய |

அருணை வெற்பாள் = அருணகிரியில் வாழும் அம்மை யாகிய
உண் = மிகுதியாகிய
ஆம் = பெருகும்
முலையும் = கற்புடைமைக்கும்
ஐ = அழகிய
மை = அஞ்சனந் தீட்டிய
தா = குழையை யெட்டுகின்ற
சர = அம்புபோன்ற கண்ணினது
நந்தனமும் = கிருபைக்கும
ஒப்பு இல் = இணை யில்லாத
உண்ணாமுலையுமை = உண்ணாமுலை யென்னும் பெயரையுடைய பார்வதியினது
மைந்தா = புதல்வனே!
சரணம் சரண் உனக்கு = உன்னிடத்தே யான் சரணம் புகுந்தேன், சரணம் புகுந்தேன்.

யான்-தோன்றா எழுவாய், சரணம் சரணம் - பயனிலை. ஏ-அசை

(க-ரை) திருமால் நிறம்போற் கறுத்து உவர்ப்பை யுடையதாயும் வலிய அரணுமிருக்கிற சமுத்திரத்திருந்த அசுரரைத் தேவரச்சந் தீரும்படி வதைத்தவனே! அக்கினி சொரூபமாகிய அருணகிரியி லமர்ந்தருளிக் கற்பிலுங் கடாக்ஷத்திலுந் தனக்கொப்பில்லாத உண்ணாமுலையம்மை புதல்வனே! யானுன்னடைக்கலம் புகுந்தேன். (உ)

## நூல்

திருவாவி னன்குடி பங்காள ரெண்முதுச் சீருரைச
திருவாவி னன்குடி வானார் பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரகங் குன்றுதொ றாடல்சென்ற
திருவாவி னன்குடி கொண்டதண் கார்வரை செப்புமினே.

| | | |
|---|---|---|
| (ப.ரை) | திரு | = மகாலக்ஷ்மிக்கு |
| | ஆவி | = உயிராகிய (திருமாலும்) |
| | நன்குடி | = நற்றேவியை |
| | பங்கு ஆளர் | = பாகத்திலுடைய பரமசிவனும் |
| | எண் | = மதிக்கத்தக்க |
| | முது | = பழமையாகிய |
| | சீர் | = சிறப்புப் பொருந்திய |
| | உரை | = (வேதாகமப்பொருளைச்) சொல்லிய |
| | சதிர் | = சதுர்ப்பாட்டையுடைய |
| | உவாவினன் | = இளையோனாகிய (கந்தசுவாமிக்கு) |
| | குடி | = உறைவிடமாகிய |
| | வான் | = ஆகாசத்தை |
| | ஆர் | = அளாவிய |
| | பரங்குன்று | = திருப்பரங்குன்றையும், |
| | சீரலைவாய் | = திருச்செந்திற் பதியையும், |
| | திரு | = செல்வ நிறைந்த |

ஆவினன்குடி = பழனியையும்,
ஏரகம் = சுவாமிமலையையும்,
குன்றுதோறாடல் = (அக்கடவுள்) திருவிளையாட்டியற்றும் பல குன்றங்களையும்,
சென்று = நடந்து
அதிர் = முழங்கும்
உவா = யானைகளின்
இனன் = கூட்டங்கள்
குடிகொண்ட = நீங்காதுறைகின்றதும்
தண் கார் = குளிர்ந்த மேகந் தவழ்வதுமாகிய
வரை = பழமுதிர்சோலையையும்,
செப்புமின் = துதி செய்யுங்கள்.

நீவிர்-தோன்றா எழுவாய், செப்புமின்-பயனிலை. ஏ-அசை.

(க-ரை) (பார்வதி சமேதரான பரமசிவனும்), லக்ஷ்மி சமேதரான திருமாலும் புகழ்கின்ற கீர்த்தியும் வல்லமையுமுடைய குமாரக் கடவுளுக்கு உறைவிடமாகிய திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலைமலை ஆகிய இவ்வாறு தலங்களையுந் துதியுங்கள். (௬)

செப்புங் கவசங் காபா லக ! தெய்வ வாவியம்பு
செப்புங் கவ! சங் கரிமரு காவெனச் சின்னமுன்னே
செப்புங் கவசம் பெறுவார்க ளுந்தெய்வ யானைதனச்
செப்புங் கவசம் புனைபுயன் பாதமென் சென்னியதே.

(ப-ரை) செ = ரிஷபத்தையுடைய
புங்கவ = தேவாகிய

சங்கர பாலக = சங்கரன் பாலனே!
தெய்வ = தெய்வீகமாகிய
வாவி = சரவணப் பொய்கையின்
அம்பு = ஜலத்தில்
செ = உற்பவித்த
புங்கவ = உயர்ந்தோனே!
சங்கு = சங்கையுடைய
அரி = விஷ்ணுவுக்கு
மருகா = மருகனே!
என = என்று
சின்னம் = திருச்சின்னமானது
முன்னே = முதலில்தானே
செப்பு = சொல்லி யார்க்கின்ற
உங்கு = உவ்விடத்திலேயே (கேட்டு)
அவசம் பெறுவார் = மயக்கம் அடையும் (பவனி) மாதரது
கணும் = விழிப்பார்வையையும்
தெய்வயானை = தெய்வயானையினது
தனச்செப்பும் = கொங்கையாகிய கலசத்தையும்
கவசம் புனை = சட்டையாக வணிந்த
புயன் = தோளை யுடையவனாகிய முருகக் கடவுளின்
பாதம் = திருவடி
என் சென்னியது = என்றலைமீதுற்றது.

பாதம்-எழுவாய், சென்னியது-பயனிலை. ஏ-அசை.

(க-ரை) "பரமசிவன் மைந்தனே! சரவணோற்பவனே! திருமால் மருகனே!" என்று சின்னம் ஆர்ப்பதைக் கேட்டு மயங்கும் பெண்களின் பார்வையையுந் தெய்வயானையின் கொங்கையையுங் கவசமாகத் தரித்த குமாரக்கடவுள் திருவடி என்றலையின் கண்ணது. (உ)

சென்னிய மோகந் தவிரா முதோகண் டிகிரிவெண்ணெய்ச்
சென்னிய மோகம் படவூ தெனத்தொனி செய்தபஞ்ச
சென்னிய மோகந் தாம்புனத்தேன்புணர் தேவைத்தெய்வச்
சென்னிய மோகம் பணிபணி யோகத் தேமொழிக்கே.

(ப-ரை) சென்னி = சிரசின்கண்ணே
அம் = (கங்கா) சலத்தின்
ஓகம் = ஆரவாரம்
தவிரா = நீங்காத (பரமசிவன்)
அமுதோ = உண்ட நஞ்சுதானோ
கண் = விழியானது,
திகிரி = சக்கரத்தை யேந்தி
வெண்ணெய் = நவநீத முண்ட
சென்னிய = கீத மிசைக்கின்ற திருமாலே
மோகம் பட = (தேவரும்) மயல்கொள்ளும்
ஊது என = ஊதென்று சொல்ல [படி
தொனி செய்த = முழக்கின
பஞ்சசென்னியமோ = பாஞ்ச சன்னியமென்னுஞ் சங்கந்தானோ
கந்தரம் = கழுத்தானது,

| | | |
|---|---|---|
| புனத்தேன் | = | (தினைப்புனத்தின்கண்) மதுரபாஷணியாகிய வள்ளிநாயகியை |
| புணர் | = | தழுவும் |
| தேவை | = | குமாரக்கடவுளை |
| தெய்வச்சென்னி | = | தெய்வத்தன்மையையுடைய சோழராஜன் |
| அமோகம் | = | அதிக ஆசையுற்று |
| பணி | = | கட்டுவித்த |
| பணி | = | வணங்கிய |
| ஏரக | = | சுவாமிமலைச்சார்பில் வாழும் |
| தேமொழிக்கு | = | இனிய மொழியையுடைய பெண்ணுக்கு. |

கண்-கந்தரம்-இரண்டும் எழுவாய், அமுது-பஞ்சசன்னியம்-இரண்டும் பயனிலை. ஏ-அசை.

(க-ரை) தெய்வச் சோழனானவன் கந்தக்கடவுளை வழிபட்ட சுவாமிமலையினில் வாழும் பெண்ணினுடைய கண் பரமசிவனுண்ட நஞ்சோ! அவள் கழுத்து திருமால் முழக்கின சங்கமோ. (கூ)

தேமொழி யத்தம் பெறவோங் தனக்கன்று சேனுலகத்
தேமொழி யத்தம் சினங்காட் டவுணரைச் சேமகாத்
தேமொழி யத்தம் புயமவர் சூடிகை சிந்தவென்ற
தேமொழி யத்தம் பதினு லுலகுமங் கித்ததொன்றே.

(ப-ரை) தேமொழி = இனிய மொழியை யுடையவளாகிய பார்வதியின்

அத்தம் = பாதியாகிய (பரமசிவன்)
பெற = உபதேசம் பெற்றுக்கொள்ள
ஓம்தனக்கு = பிரணவத்திற்கு
அன்று = பூர்வத்தில்
சேணுலக = தேவலோகத்தின்
தேம் = நன்மை யெல்லாம்
ஒழிய = அற்றுப்போகும்படி
தம் = தங்கள்
சினம் = கோபத்தை
காட்டு = காட்டிய
அவுணரை = அசுரரை
சேமகர = ஆண் சுறுமீனுக்கு
தேம் = இடமாகிய சமுத்திரத்தில்
மொழி = கணுக்களையுடைய
அத்தம் = கரங்களும்
புயம் = தோள்களும்
அவர் = அவர்களுடைய
சூடிகை = கிரீடங்களும்
சிந்த = சிதற
வென்ற = சங்கரித்துச் செயித்த
தே = குமாரக்கடவுளானவர்
மொழி = உரைத்தருளிய
அத்தம் = பொருள்
பதினுலுலகும் = ஈரேழு லோகத்திலும்
அந்தித்தது = பொருந்தி நின்றது
ஒன்று = ஒரே தன்மையாக.

அத்தம் - எழுவாய், அந்தித்தது - பயனிலே. ஏ - அசை.

(க-ரை) விண்ணுலக நன்மையை யொழித்துவந்த அசுரரைச் சமுத்திரத்திற் சங்கரித்து வென்ற குமாரக்கடவுள் பரமசிவனுக்கு உபதேசித்த பிரணவப் பொருளானது பதினாலுலகத்திலுமொரே தன்மையாய்ப் பொருந்தினது.

தித்தவித் தார மனித்தரைத் தேவர் வணங்கமுன்போ
தித்தவித் தாரகை மைந்தர்செந் தூர்க்கந்தர் சிந்தூரவா
தித்தவித் தார முடையா ரருள்வெள்ளந் தேக்கியன்பு
தித்தவித் தாரந் தனிவீ டுறத்துக்கச் செவ்வனலே.

| | | |
|---|---|---|
| (ப-ரை) | தித்த வித்தாரம் | = தித்தவென்னுந்தாளவிரிவினுல் |
| | மன் | = நிலைபெற்ற |
| | நித்தரை | = நடனமிடும் பரமசிவனுக்கு |
| | தேவர் | = அமரர்கள் |
| | வணங்க | = வந்திக்கும்படியாக |
| | முன் | = முற்காலத்தில் |
| | போதித்த | = உபதேசித்தவராகிய |
| | வி | = விசேஷமான |
| | தாரகை | = கார்த்திகைப் பெண்களின் |
| | மைந்தர் | = புதல்வரும் |
| | செந்தூர்க் கந்தர் | = செந்திற்பதி வாழ் கந்தவேளும் |
| | சிந்தூரம் | = திலகத்தை |
| | ஆதித்த | = சூரியனைப்போலுடைய |
| | வி | = நல்ல |
| | தாரம் உடையார் | = (வள்ளி தெய்வயானை யென்னுந் தேவிகளையுடைவருமாகிய) |

அருள் வெள்ளம் = தமது கிருபாநதியை
தேக்கி = என்னுள்ளத்து நிறைத்து
அன்பு = பத்தியை
உதித்து = தோற்றுவித்து
அவித்தார் = தணித்தார்
அம் = அழகிய
தனி = ஒப்பற்ற
வீடு = மோட்சம்
உற = அடையும்படி
துக்கம் = இடும்பையை (விளக்கின்ற)
செ = செனனமாகிய
அனல் = அக்கினியை.

மைந்தர்முதலிய-எழுவாய், அவித்தார்-பயனிலை. ஏ—அசை.

(க-ரை) முற்காலத்திற் பரமசிவனுக் குபதேசித்தவரும், கார்த்தி கேயரும், வள்ளிதெய்வயானை பாகருமாகிய செந்தூர்க்கந்தர் என்னுள் கருணைவெள்ளத்தை நிறைத்து யான் கதி யடையும்பொருட்டுக் கொடிய அக்கினிபோன்ற துன்பத்தை விளக்கு மென் பிறப்பை யொழித்தார்.

செவ்வந்தி நீலப் புயமுரு கா! பத்தர் சித்தமெய்யிற்
செவ்வந்தி நீலத்தை யுற்றருள் வாய்திங்கட் சேய்புனைந்த
செவ்வந்தி நீலத் தொருபாகர் போன்ற தினிச்சிந்தியார்
செவ்வந்தி நீலத்தி னீடுமுற் ருத திமிரமுமே.

(ப-ரை) செவ்வந்தி = செவ்வந்தி என்னும் பூமாலையை (யும்
நீலம் = கருங்குவளை மாலையையும் (புனைந் (திடும்

| | |
|---|---|
| புயம் | = புயங்களையுடைய |
| முருகா | = முருகக்கடவுளே ! |
| பந்தர் | = அன்பரது |
| சித்தமெய்யில் | = இருதய வுண்மை நிலையில் |
| செவ்வு | = செம்மையாக |
| அந்தி | = பொருந்தி யிருக்கின்ற |
| நீ | = நீ |
| லத்தை உற்று | = கிருபை கூர்ந்து |
| அருள்வாய் | = (அம் மாலையை) எனக்குத் தந்தருளவேண்டும் ; |
| திங்கள் சேய் | = குழவித் திங்களை |
| புனைந்த | = அணிந்த |
| செவ்வந்தி | = சிவந்த மாலைக்காலமானது |
| நீலத்து ஒரு பாகா | = நீல நிறத்தையுடைய பார்வதி பங்கரை |
| போன்றது | = தோன்றி விளங்குகின்றது |
| இனி | = இனிமேல் |
| சிந்தியார் | = (உன்னைத்) தியானியாதவர்கள் (அடையும்) |
| செ | = செனனமாகிய |
| வந்தி | = வருத்தத்தை (விளக்கும்) |
| நீலத்தின் | = அஞ்ஞான விருளைப்போல |
| நீடும் | = நீடித்து நிற்கும் |
| முற்றாத | = தொலையாத |
| திமிரமும் | = இருட்டும். |

நீ-எழுவாய், அருள்வாய்-பயனிலே. ஏ-அசை.

(க-ரை) செவ்வேந்தி நீலோற்பலமாலிகை யணியு முருகா! பரம சிவனைப்போல இளம்பிறையுஞ் செவ்வானமுந் தோன்றிய மாலைக் காலமும் உன்னை நினையா ரடையுஞ் செனன விருளைப்போல இருட்டும் வந்தது; அன்பாது சித்தத்தில் வீற்றிருக்கின்ற நீ கருணையுற் றும் மாலையை யெனக் கருளவேண்டும். (கூ)

திமிரத் திமிரக் கதரங்க கோப!செவ் வேல! கைவேல்
திமிரத் திமிரக் கருலாந் தக!வரைத் தேன்பெருகுந்
திமிரத் திமிரத் தனையாளி யாளுமென் சேவகனே!
திமிரத் திமிரக் கனலாய சந்தன சீதளமே.

| | | |
|---|---|---|
| (ப-ரை) திமிர | = | இருள் நிறத்ததும் |
| திமி | = | திமிங்கல மீனை |
| ரக்க | = | இரட்சிப்பதுமாகிய |
| தரங்கம் | = | சமுத்திரத்தை |
| கோப | = | கோபித்தவனே ! |
| செவ் | = | சிவந்த |
| வேல | = | வேலாயுதத்தை யுடையானே ! |
| கை வேல் | = | கையின் வேலாயுதமும் |
| திமிர | = | திமிராகும்படி |
| திமி | = | குற்றுகின்ற |
| ரக்க குலாந்தக | = | அசுரர் குலத்துக்கு யமனே! |
| வரைத்தேன் பெருகு | = | மலையினின்று வீழுந் தேனூற் பெருகிய |
| உந்திமிர் | = | கான்யாற்றையுடைய புனத்தில் வாழும் வள்ளிநாயகீ ! |

| | | |
|---|---|---|
| அத்திமிர் | = | ஐயிராவதத்தால் வளர்க்கப்பட்ட தெய்வயானைநாயகி ! |
| அத்தனை | = | அவ்வளவு |
| ஆவி | = | (என்) பிராணனை |
| ஆளும் | = | ஆண்டுகொள்ளுங்கள் ! |
| என் | = | என்றிங்கிதம் பேசும் |
| சேவகனே | = | வீரனே! |
| திமிரத் திமிர | = | பூசப் பூச |
| அனல் ஆய | = | அக்கினிபோ லிருக்கின்றன |
| சந்தன சீதளம் | = | (யான் திமிர்ந்திருக்கின்ற) சந்தன முதலிய குளிர்ந்த வஸ்துக்களும் (ஆதலால், வந்து தழுவியருளவேண்டும்). |

தரங்க கோப முதலியன—எழுவாய், என்னைத் தழுவ வேண்டும் என்னும் பயனிலையைக் குறிப்பாய்க் காட்டி நின்றன.

(க-ரை) திமிங்கலமீனையுடைய இருண்ட சமுத்திரத்தைக் கோபித்தவனே! வேலவனே! அசுரர் குலாந்தகனே! வள்ளி தெய்வயானையென்னு நாயகிமார் தழுவும்படி இதம் பேசும் வீரனே! யான் பூசுஞ் சந்தன முதலிய குளிர்ந்த வஸ்துக்கள் இப்போதுன் விரகதாபத்தாலெனக்கு வெப்பத்தை விளக்குகின்றன ஆதலால், என்னைத் தழுவ வேண்டு மென்பது குறிப்பு.

சீதனங் கோடு புயங்கைகொண் டார்தங் திருமருக
சீதனங் கோடு முடியாளர் சேய்தனக் கேதுளதோ
சீதனங் கோடு னிதருமென் பார்தொழுந் தேவிபெறுஞ்
சீதனங் கோடு கொடிவேன் மயூரஞ் சிலையாசே.

(ப-ரை) ஸ்ரீ = மகாலக்ஷ்மியினது
தனம் = கொங்கையையும்
கோடு = சங்கத்தையும்
புயம் = திருத்தோளிலும்
கை = திருக்காத்திலும்
கொண்டார் தம் = தரித்த விஷ்ணுவினது
திரு மருக = சிறந்த மருகனும்
சீதன் = சந்திரனை
அம் = அழகிய
கோடு = கோணல் வடிவாகத் (தரித்த)
முடியாளர் = பரமசிவன்
சேய்தனக்கு = மைந்தனுமாகிய குமாரக்கடவுளுக்கு
எதுளதோ = உள்ளதென்னெனில்
சீ = இகழத்தக்க
தனம் = திரவியம்
கோள் = குற்றத்தையும்
துனி = துன்பத்தையும்
தரு = கொடுக்கத்தக்கது
என்பார் = என்று நீக்கிய அன்பர்கள்
தொழும் = வணங்குகின்ற
தேவி = வள்ளிநாயகியால்
பெறும் சீதனம் = கிடைத்த வரிசையாகிய
கோடு = கொம்பினோடு
கொடி = கோழிக் கொடியும்

| | | |
|---|---|---|
| வேல் | = | வேலாயுதமும் |
| மயூரம் | = | மயில் வாகனமும் |
| சிலை | = | குறிஞ்சிநிலமாகிய மலைகளின் |
| அரசு | = | ஆளுகையுமாம். |

எதுஎது-எழுவாய், இவைகளுடைமையாம்-பயனிலை, ஏ-அசை.

(ந-ரை) திருமாலுக்கு மருகோனும் பரமசிவனுக்கு மைந்தனுமான குமாரக்கடவுளுக்கு வள்ளிநாயகி சீதனத்தாற் பெற்ற கொம்புடன் கோழிக்கொடியும் வேலாயுதமு மயில்வாகனமும் மலைகளின் ஆளுகையும் உடைமைகளாம். (அ)

சிலைமத னம்படு மாறெழுஞ் சேய்மயி லுச்சிட்டவெச்
சிலைமத னம்படு சிந்துவை யிந்துவைச் செய்வதென்யான்
சிலைமத னம்படு காட்டுவர் கேளிருஞ் செங்கழுநீர்ச்
சிலைமத னம்படு தாமரை வாவி திரள்சங்கமே.

(ப-ரை)

| | | |
|---|---|---|
| சிலை | = | கருப்புவில்லையுடைய |
| மதன் | = | மன்மதனது |
| அம்பு | = | புஷ்பபாணம் |
| அடுமாறு எழும் | = | கொல்லும்படி வருகின்றன; |
| சேய் மயில் | = | குமாரக்கடவுளின் மயிலினது |
| உச்சிட்ட | = | எச்சிலாகிய பாம்பினது |
| எச்சிலை | = | எச்சிலாகியதென்றற்காற்றையும், |
| மதனம் படு | = | கடையப்பட்ட |
| சிந்துவை | = | சமுத்திரத்தையும், |
| இந்துவை | = | சந்திரனையும் |
| செய்வதென்யான் | = | நானென்னசெய்து கடப்பேன்? |
| கேளிரும் | = | சுற்றத்தாரனைவரும் |
| சிலை | = | ஆர்ப்பரிப்போடு |
| மதம் | = | ஆங்காரத்தை |

| | | |
|---|---|---|
| நம்படு | = | நம்மிடத்திலே |
| காட்டுவர் | = | அலர்தூற்றிக் காட்டாநின்றார்கள்; |
| செங்கழுநீர் | = | குவளைமலர் நிறைந்த |
| சிலை | = | திருத்தணிகை மலையின்கண் |
| மது | = | தேனும் |
| அனம் | = | அன்னப்பட்சியும் |
| படு | = | உண்டாகிய |
| தாமரை | = | தாமரைகளையுடைய |
| வாவி | = | பொய்கையில் (வாழும்) |
| திரள் | = | கூட்டமாகிய |
| சங்கமே | = | சங்கினங்களே! |

யாம்-எழுவாய், செய்வதென்-பயனிலை.

(க-ரை) குமாரக்கடவுளினது தணிகையங்கிரித் தாமரைத் தடாகத்தில் வாழுஞ் சங்கினங்களே! என்மேல் மன்மதன் பாணப் பிரயோகஞ் செய்யாநிற்கின்றான்; தென்றலும் சந்திரனும் கடன் முழக்கமும் வருத்துகின்றன; சற்றுந்தாரது கோபதாபமும் உண்டாயிருக்கின்றன இவற்றை என்ன செய்து கடப்பேன்? (கூ)

திளக் காக்கரை வென்கண்ட வேலன் றிசைமுகன்மால்
திளக் காக்கரை யான்பாட நாடுதல் செய்யசங்க
திளக் காக்கரை கான்பான்கைந் நீத்திசை வார்பனிக்க
திளக் காக்கரை வானீட்டு மைந்தர்புந் திக்கொக்குமே.

(ப-ரை)

| | | |
|---|---|---|
| திர | = | உறுதியான |
| ளக்க | = | லட்சமான |
| ரக்கரை | = | அசுரர்களை |
| வென்கண்ட வேலன் | = | புறங்காட்டச்செய்த வேலாயுதனை |
| திசைமுகன் | = | பிரம்மாவுக்கும் |

| | |
|---|---|
| மால் | = மாயோனுக்கும் |
| திரள் | = அநேக |
| அக்கர் | = கண்களையுடைய இந்திரனுக்கும் |
| அக்கர் | = உருத்திராட்ச மாலையையுடைய பரமசிவனுக்கும் |
| ஐ | = சுவாமியாகிய குமாரக் கடவுளை |
| யான் பாட நாடுதல் | = நான் பாடும்படி கருதுகின்றது |
| செய்ய | = அழகிய |
| சங்கு | = சங்குகள் |
| அதிர் | = முழங்கும் |
| அளக்கர் | = சமுத்திரத்தை |
| அக்கரை காண்பான் | = கரை காணும்படி |
| கைந்நீத்திசைவார் | = கையினால் நீந்திப்போவாரது (புத்திக்கும்) |
| பனி கதிர் | = தண் கதிரையுடைய சந்திரனை |
| அள | = பிடித்துக்கொள்ளும்படி |
| காக்கரை | = கையளவை |
| வான் நீட்டு மைந்தர் | = ஆகாசத்திலே நீட்டுஞ் சிறுவர்களது |
| புந்திக்கு | = புத்திக்கும் |
| ஒக்கும் | = ஒப்பாகும். |

நாடுதல்-எழுவாய், ஒக்கும்-பயனிலை, ஏ-அசை.

(க-ரை) அசுரர்களைச் செயித்தவரும், பிரமன் முதலியோருக்குச் சுவாமியுமாகிய குமாரக்கடவுளை யான் பாடக் கருதுதல், கையினாற் கடலை நீந்தவும், கையை நீட்டிச் சந்திரனைப் பிடிக்கவும் நினைப்போர் புத்திக் கொப்பாயிருக்கின்றது. (சo)

திக்கத் திக்கோடு படிபுடைச் சூதத் தெறிபடபத்
திக்கத் திக்கோடு கடடக் கடறடி சேப்சடைச்சத்
திக்கத் திக்கோடு துறைத்திறத் தற்ற! குறக்குறச்சத்
திக்கத் திக்கோடு பறித்துக் கொடாதி! சிறைபிறப்பே.

(ப-ரை)

| | | |
|---|---|---|
| சூத | = | மாமரமாய் நின்ற சூரனை |
| தெறி | = | தெறித்த |
| படபத்தி | = | ஆயிரம் பணமகுடத்தையுடைய ஆதிசேடனது |
| சத்து | = | தலையிலே |
| இக்கோடு | = | இந்தச் சங்குகள் |
| உகள | = | ஊரும்படி யாழ்ந்த |
| தடக்கடல் | = | பெரிய சமுத்திரத்தின்கண்ணே |
| தடி | = | கொன்ற |
| சேப்படைச்சத்தி | = | சிவந்த வேற்படையை யுடையவனே! |
| கத்தி | = | கதறி |
| கோடு | = | மாறுபட்ட |
| துறைத்திறத்து | = | பரசமய வழியில் |
| அற்ற | = | மறைந்து நிற்பவனே! |
| குற | = | குறச்சாதியிற் பிறந்த |
| குறச்சத்திக்கு | = | வள்ளிநாயகிக்கு |
| அத்திக்கோடு | = | ஆனைக் கொம்பை |
| பறித்து | = | பிடுங்கி |
| கொடு | = | கொடுத்த |
| ஆதி | = | முதல்வனே! |
| சிறை | = | பஞ்சேந்திரியங்களால் கட்டுண்டிருக்கிற |
| பிறப்பு | = | (எனது) ஜெனனத்தை |
| திக்க | = | திகைக்கும்படி |
| திக்கோடு | = | திசைதோறும் படர்ந்த |

| | | |
|---|---|---|
| வல்லவன்! | = | வல்லவனே! |
| சூரை | = | சூரனை |
| சிகரியுடன் | = | கிரவுஞ்சகிரியுடன் |
| சேர | = | அடியோடு |
| பொரு | = | போர் செய்து |
| பட | = | அழியும்படி |
| வென்று | = | ஜெயித்து |
| அண்டர் | = | தேவர்களால் |
| ஏத்திய | = | துதி செய்யப்பட்ட |
| சேவகன் | = | வீரனே! |
| வான் சேர் அப்பு | = | ஆகாய கங்கையை |
| ஒருப்பட | = | ஒன்றாக |
| வேணியில் | = | சடையின்கண் |
| சேர்த்தவன் | = | அடக்கித் தரித்த பரமசிவன் |
| செய் தவமே | = | செய் தவமாகிய மைந்தனே. |

(க-ரை) கொல்லிமலை வெள்ளிமலைச் சாரலையுடைய வனத்தில் வாழ்கின்ற வள்ளிநாயகிக்குக் காதலனும், சமுத்திரத்தை வேலால் வற்றும்படி செய்தவனும், சூரனையுங் கிரவுஞ்ச கிரியையும் நிர்மூலமாக அழித்துத் தேவர்களால் துதிக்கப்பட்டவனும், கங்காதாராகிய பரமசிவன் செய்தவமென்னு மைந்தனுமாகிய குமாரக்கடவுளே. (எச)

செய்தவத் தாலஞ்சு சிரெழுத் தோதிலந் தீதலருஞ்
செய்தவத் தாலஞ்சு கம்பெறச் சேயுரைக் கேற்றுருப்போய்ச்
செய்தவத் தாலஞ்சு வைக்கனி யீன்றதென் னேம்வினையே
செய்தவத் தாலஞ்சு கின்றன மும்மலச்செம்மல்கொண்டே.

(ப-ரை)

| | | |
|---|---|---|
| செய் தவத்தால் | = | அழகிய தவத்தினாலாவது |
| அஞ்சு சிரெழுத்து | = | சிறந்த பஞ்சாக்ஷரத்தை |
| ஓதிலம் | = | துதிக்கின்றோமில்லை; |
| தீது | = | தீமை |
| அலரும் | = | விளையும் |

| | |
|---|---|
| செய் | = நரகபூமி |
| தவ | = அழிந்துபோகவும் |
| தாலம் | = உலகெல்லாம் |
| சுகம் | = நன்மையை |
| பெற | = அடையவும் |
| சேய் உராக்கு | = சம்பந்தப்பிள்ளையாக அவதரித்துத் திருவாய்மலர்ந் தருளிய தேவாரத்தினால் |
| ஏற்று உரு போய் | = ஆணுரு மாறி |
| செய்த | = சிவந்த |
| அ தாலம் | = அப்பெண்ணுருவாகிய பனை |
| சுவை கனி | = இனிய பழத்தை |
| ஈன்றது | = தந்தது |
| என்னேம் | = என்று துதிக்கின்றேமில்லை; |
| மும்மலச்செம்மல்கண்டு | = மும்மலமாகிய போர்வையைத் தரித்துக்கொண்டு |
| வினையே செய்து | = தீவினையே புரிந்து |
| அவத்தால் | = வந்த துன்பத்தினால் |
| அஞ்சுகின்றனம் | = அச்சமுற்றிருக்கின்றனம். |

யாம் - தோன்றா எழுவாய், அஞ்சுகின்றனம் - பயனிலை. (இவ் கவியும், மேற் கவியும் குளகம்.)

(க-ரை) நெஞ்சமே! உலகத்தார் நரகமெய்தாம லின்பத்தை யடையவும், ஆண்பனை பெண்பனையாகிப் பழத்தைக் கொடுக்கவும் சம்பந்தராயவதரித்துத் தேவாரத்தை யருளிச்செய்த குமாரக்கடவுளைத் துதியாமலும், அவரது பஞ்சாக்ஷரத்தை யனுஷ்டிக்காமலும், தவத்தில் முயலாமலும், தீவினைத் தொடர்பால் மும்மலப் பிணிப்புண்டு யாம் அவத்தில் முயன்று அஞ்சுகின்றனம். (எரு)

செம்மலை வண்டு கடாரங்க மாவென்ற திண்படைவேற்
செம்மலை வண்டு வசவார ணத்தனைச் செப்பவுன்னிச்
செம்மலை வண்டு தவந்தமிழ்ப் பாண!தென் டீங்கையில்வாய்
செம்மலை வண்டு விருப்புறு மோவிது தேர்ந்துரையே.

(ப-ரை) செம் = சிவந்த நிறத்தையுடைய
மலை = கிரவுஞ்சகிரியையும்
வண்டு = சங்கினங்கள்
உகள் = உலாவுகின்ற
தரங்கம் = கடலின்கண்
மா = மாவடியாய் நின்றசூரனை
வென்ற = செயித்த
திண் = திண்ணிய
வேல்படை = வேலாயுதத்தையுடைய
செம்மலை = கடவுளை
வண் = வளப்ப மிகுந்த
துவசவாரணத்தனை = கோழிக்கொடியையுடைய குமாரக்கடவுளை
செப்ப = புகழ்ந்து பாட
உன்னி = நினைத்தும்
செம்மலை = மனதைப் புதைத்துவிடாதே;
வண்டு = குற்றம்
தவு = நீங்கிய
அம் = அழகிய
தமிழ்ப்பாண! = தமிழ்ப்பாணனே!
தென் = தெளிந்தும்
தீம் = இனிப்புற்றும்
கையில் = கரத்தில்
வாய் = வாய்ப்பினும்
செம்மலை = பழமையாகிய பூவை
வண்டு = சுரும்பினங்கள்

| | | |
|---|---|---|
| விருப்புறுமோ | = | இச்சிக்குமோ; |
| இது | = | இதை |
| தேர்ந்து | = | ஆராய்ந்து |
| உரை | = | அக் கடவுளைப் பலகாலும் புகழ்ந்து பாடு! |

நீ - தோன்றா எழுவாய், உரை - பயனிலை. ஏ-அசை.

(க-ரை) குற்றமின்றி யின்னிசை பாடும் பாணனே! வண்டுகள் அன்றலர்ந்த மலர்களை விட்டுப் பழமையாகிய மலர்களை விரும்புமா? அத்தன்மையள் யானென் றறிந்து நீ கிரவுஞ்சகிரியையும் சமுத்திரத்தில் மாவடிவாய் நின்ற சூரனையும் வென்ற கோழிக்கொடியோனான கந்தசுவாமியினது திருப்புகழைக் குறைவின்றிப் பலகாலும் புகழ்ந்து பாடுவாயாக! (எச)

தேரை விடப்பணி யேறேறி முப்புரஞ் செற்றபிரான்
தேரை! விடப்பணி சூராரி! யென்க தெரிவையர்பால்
தேரை விடப்பணி வாய்ப்படு மாறு செறிந்தலகைத்
தேரை விடப்பணித் தென்றேடி யென்றுந் திரிபவரே!

(ப-ரை)

| | | |
|---|---|---|
| தெரிவையர்பால் | = | காம வாஞ்சையால் பரத்தையரிடத்தில் |
| தேரை | = | 'தேரையானது |
| விட | = | விஷத்தையுடைய |
| பணி | = | பாம்பினது |
| வாய் | = | வாயில் |
| படுமாறு | = | அகப்பட்டாற்போலும்' |
| செறிந்து | = | சிக்கிக்கொண்டு |
| அலகைத் தேரை | = | பேய்த்தேரென்னுங்கானலை |
| விடு | = | ஊறுகின்ற |
| அப்பு | = | சலமானது |

| | |
|---|---|
| அணித்து என்று | = சமீபமாயிருக்கின்றதென்று |
| என்றும் ஓடி | = எப்போதும் ஓடியோடி |
| திரிபவரே! | = அலைந்து திரிகின்றவர்களே! |
| தேரை | = தேவர்களெல்லாங் கூடிச் செய்த தேரை |
| விட | = அச்சு முறியும்படி |
| பணி | = செய்து |
| ஏறு | = இடபவாகனத்தின்மேல் |
| ஏறி | = இவர்ந்து |
| மூப்புரம் | = திரிபுரத்தை |
| செற்ற | = நகைத்தெரித்த |
| பிரான் | = பரமசிவனுக்கு |
| தேர் | = பிரணவப்பொருள் தெளியச் செய்த |
| ஐ! | = சுவாமியே! |
| விள் | = சொல்லத்தக்க |
| தப்பு | = குற்றத்தால் |
| அணி | = நெருங்கிய |
| சூராரி! | = சூர சங்காரனே! |
| என்க | = என்று துதிக்கக்கடவீர்கள்! |

நீங்கள் - தோன்று எழுவாய், என்க - பயனிலை.

(க-ரை) பாம்பின் வாய்ப்பட்ட தேரைபோல மாதரது மயக்கத்தில் அகப்பட்டுக் கானலை நீரென் றெண்ணிச் செல்பவர்போ லவர்கள் பொய்யின்பத்தை நம்பி வருந்துவோரே! அதை விட்டுத் தேவர்கள் கட்டிச் சமைந்த தேரை முறித்து இடபமேறித் திரிபுர மெரித்த பரமசிவனது சுவாமியே! சூரசங்காரனே! என்று துதியுங்கள். (எஎ)

திரிபுரத் தப்புப் புவிதாத் தோன்றி சிலைபிடிப்பத்
திரிபுரத் தப்புத் தலைபட நாண்டொடுஞ் சேவகன்கோத்
திரிபுரத் தப்புத் திர!மான் மருக! திருக்கையம்போ
திரிபுரத் தப்புத் துறையா யுதவெனச் செப்பு நெஞ்சே!

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நெஞ்சே | = | மனமே! |
| | புரத்து | = | பூரநாளில் |
| | அப்பு | = | கடல் சூழ்ந்த |
| | புவி | = | பூவுலகத்தை |
| | தர | = | பெற்றருளும்படிக்கு |
| | தோன்றி | = | அவதரித்த உமாதேவி |
| | சிலை | = | தனதுள்பாகமாகிய இடது கரத்தால் மேருவாகிய வில்லை |
| | பிடிப்ப | = | பிடித்துக்கொள்ளச் செய்து |
| | திரிபுரத்து | = | முப்புரத்தின்மேல் |
| | அப்புத்தலைபட | = | விஷ்ணுவாகிய பாணத்தைப் பிரயோகஞ் செய்யும் பொருட்டு |
| | நாண் | = | தனது பாகமாகிய வலதுகரத் தால்வாசுகியாகியநாணை |
| | தொடும் | = | ஏறிட்ட |
| | சேவகன் | = | பரமசிவனது |
| | கோத்திரி | = | திருச்செங்கோட்டு மலையை |
| | புரத்து | = | நகரமாகக் கொண்ட |
| | அ புத்திர! | = | அந்த மைந்தனே! |
| | மால் மருக! | = | திருமால் மருகோனே ! என் றும், |
| | திருக்கை | = | திருக்கை யென்னு மீனை யுடைய |
| | அம்போதி | = | சமுத்திரத்தின்கண் |

| | | |
|---|---|---|
| ரிபு | = | அசுரராகிய சத்துருக்களது |
| ரத்தப் புத்துறை | = | இரத்தங்களையேபுதிய வுறை யாகத் தோய்ந்த |
| ஆயுத என | = | வேலாயுதத்தை யுடையவனே! என்றும் |
| செப்பு | = | புகழ்ந்து சொல்லி |
| திரி | = | நீ யென்றுந் திரிவாயாக! |

நீ - தோன்று எழுவாய், திரி - பயனிலை. ஏ - அசை.

(க-ரை) நெஞ்சமே! பூரநாளிற் பிறந்த லோகமாதாவாகிய பார்வதி வில்லைப் பிடித்துக்கொள்ள நாணேறிட்டுத் திரிபுரத்தின்மேல் விஷ்ணுவாகிய பாணப்பிரயோகஞ் செய்த பரமசிவனது மைந்தனாகிய திருச்செங்கோட்டு மலையாதிபனே! திருமால் மருகோனே! சமுத்திரத்தில் அசுரரை வதைத்த வேலாயுதனே! என்று சொல்லிக்கொண்டு நீ திரிவாயாக. (எஅ)

செப்பா ரமுதலை மன்னோ திகனங் குரும்பைமுலை
செப்பா ரமுதலை கண்கா னகைமுருந் தீரிருகண்
செப்பா ரமுதலை வாவியிற் சென்றபி ரான்மருகன்
செப்பா ரமுதலை வேர்களை வான்வரைச் சீரினுக்கே.

| | | |
|---|---|---|
| ஈர் இருகண் | = | நான்கு கண்களையுடைய |
| செ | = | சிவந்த |
| பார முதலை | = | பெரிய முதலைவாயிற் சிக்கிய யானையை |
| வாவியில் | = | தடாகத்தின்கண் |
| சென்ற | = | இரட்சிக்கும்படி விரைந்து போன |
| பிரான் | = | திருமாலின் |
| மருகன் | = | மருகோனும், |

(ம-ரை) செப்பார = மிகவும் தன்னைப் புகழ்ந்து துதிப்பவர்களது
முதலே = பிறப்பின் மூலத்தை
வேர் களைவான் = நிர்மூல மாக்குவோனுமாகிய குமாரக்கடவுளது
வரைச்சிரினுக்கு = மலையில் வாழு மங்கைக்கு,
செப்பு = சொல்லானது
ஆர் அமுது = ஆரமுதம்போலும்;
அல் = இருள்நிறமும்
ஐ = அழகும்
மன் = நிலைபெற்ற
ஓதி = கூந்தலானது
கனம் = மேகம் போலும்;
குரும்பை = குரும்பையொத்த
முலை = தனமானது
செப்பு = செப்புப்போலும்;
கண் = விழியானது
ஆர = முத்துகளையுடைய
முது = பழமையாகிய
அலை = கடல்போலும்;
கால் = ஒளி தங்கிய
நகை = பல்லானது
முருந்து = மயிலிறகி னடிபோலும்.

செப்பு முதலிய - எழுவாய், ஆரமுதமுதலிய - பயனிலை, ஏ-அசை.

(க-ரை.) தடாகத்தின்கண் முதலைவாயிற் சிக்கிய யானையை ரக்ஷித்த திருமால் மருகோனும் தன்னைத் துதிப்பவர்களது பிறப்

பை பொழிப்பவனுமான குமாரக்கடவுளினது மலையில் வாழு மங்கைக்கு மொழி - அமுதமும், கூந்தல் - மேகமும், தனம்-செப்பும், கண் -கடலும், நகை-மயிலிறகினடியும் போன்றிருக்கின்றன. (எசு)

சீராம ராம! சிவசங்க ரா! நுந் திருமுடிக்குச்
சீராம ராம துகரத் துழாயென்பர் தெண்டிரைமேற்
சீராம ராம னிறந்திறக் கத்தொட்ட சேய்கழற்குச்
சீராம ராம னிமையோர் மகுடச் சிகாவிம்பமே.

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | சீ | = | இலக்குமிக்கு நாயகனான |
| | ராம | = | அழகிய |
| | ராம! | = | திருமாலே! |
| | சிவசங்கரா! | = | பரமசிவனே! |
| | நும் | = | உங்கள் |
| | திரு முடிக்கு | = | அழகிய சென்னிகளுக்கு |
| | சீர் | = | சிறந்த தன்மையாவது |
| | ஆம் | = | கங்காசலத்தோடே |
| | அரா | = | அரவாபரணமும், |
| | மதுகர | = | தேன் பொருந்திய |
| | துழாய் | = | திருத்துழாய் மாலையும் |
| | என்பர் | = | என்று சொல்லுவார்கள்; |
| | தெள் | = | தெளிந்த |
| | திரைமேல் | = | அலையையுடைய கடலின்கண் |
| | சீரா | = | கவசத்தை |
| | மராம | = | மாமரமாய் நின்ற சூரனது |
| | நிறம் | = | மார்பை |
| | திறக்க | = | பிளக்கும்படி |
| | தொட்ட | = | தனது மெய்யிற் புனைந்த |
| | சேய் கழற்கு | = | முருகக்கடவுளது திருவடிக்கு |
| | இமையோர் | = | தேவர்களுடைய |
| | சீர் ஆம் | = | சிறப்பா யமைந்திருக்கும் |

| | | |
|---|---|---|
| ஆரா | = | நெருங்கிய |
| மன் | = | நிலைபெற்ற |
| மகுட | = | கிரீட மணிந்த |
| சிகாவிம்பம | = | வட்டவடிவாகிய தலைகள். |

சிகாவிம்பம் - எழுவாய், சீராம் - பயனிலை. ஏ-அசை.

(க-ரை) பரமசிவனே ! உமது திருமுடிக்குக் கங்கையும் பாம்பும் மாலையாம்; திருமாலே! உமது திருமுடிக்குச் சிறந்த திருத்துழாய் மாலிகையாம்; மெய்யிற் கவசத்தை யணிந்து சமுத்திரத்தின்கண் சூரனை வென்ற குமாரக்கடவுள் திருவடிக்கோ தேவர்களது முடித்தலைகளே மாலையாம். (அ0)

சிகாவல வன்பரி தப்பாடு செய்யுஞ்செவ் வேலவிலஞ்
சிகாவல! வன்பரி வூரார் மதனித் திலஞ்சலரா
சிகாவல வன்பரி யங்கங் குழல்பெற்ற தேமொழிவஞ்
சிகாவல வன்பரி யானல மன்றிலுந் தென்றலுமே.

(ப-ரை)

| | | |
|---|---|---|
| சிகாவல | = | மயில்வாகனனே! |
| அன்பர் | = | தனக்கன்புள்ள அடியார்க்கு |
| இதப்பாடுசெய்யும் | = | இன்னருள் செய்கின்ற |
| செவ் வேல | = | அழகிய வேலாயுதத்தையுடையவனே! |
| இலஞ்சி காவல! | = | இலஞ்சிப்பதியைக் காத்தளிப்பவனே! |
| வன்பரி வூரார் | = | என்னை யலர்தூற்று மிவ்வூரினராகிய கொடியவர்களும், |
| மதன் | = | மன்மதனும், |
| நித்திலம் | = | முத்து விளைகின்ற |
| சலராசி | = | சமுத்திரமும், |
| கா | = | சோலையும், |

| | | |
|---|---|---|
| அலவன் | = | சந்திரனும், |
| பரியங்கம் | = | கட்டிலும், |
| குழல் | = | புள்ளாங் குழலும் |
| பெற்ற | = | என்னைப் பெற்றவளாகிய |
| தே மொழி | = | இனிய மொழியையுடைய |
| வஞ்சி | = | தாயின் |
| காவு | = | காவலும் |
| அல | = | இவையெல்லாம் பெரிதல்ல; |
| வன் | = | வலிய |
| அன்றிலும் | = | (காமசின்னமாகிய) அன்றிற் பட்சியும் |
| தென்றலும் | = | (தோராகிய)தென்றற்காற்றும் |
| பரியானலம் | = | வடவாமுகாக்கினி போன்று வருத்துகின்றன. |

அன்றிலும், தென்றலும்-எழுவாய், பரிபானலம் - பயனிலை, ஏ-அசை.

(க-ரை) மயில்வாகனனே ! அன்பர்க்கருளும் வேலாயுதனே ! இலஞ்சிப் பதியோனே ! எனக்குப் பகைவராகிய ஊராராலும், சாமனு லும், கடலாலும், சோலையினாலும், கட்டிலினாலும், வேய்ங்குழலாலும், தாயின் காவலாலும் உண்டாகுமிடர் பெரிதல்ல. அன்றிலும் தென் றலுமே வடவாமுகாக்கினிபோன் றிருக்கின்றன. ஆகையால், எனக் கருள் செய்ய இது சமயம். (அக)

தென்றலை யம்பு புனைவார் குமார! திமிரமுந்நீர்த்
தென்றலை யம்புய மின்கோ மருக! செழுமறைதேர்
தென்றலை யம்பு சகபூ தரவெரி சிந்திமன்றல்
தென்றலை யம்பு படுநெறி போயுயிர் தீர்க்கின்றதே.

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | தென் | = | வண்டுகளிசை பாடுகின்ற |
| | தலை | = | சிரசின்கண் |
| | அம்பு | = | கங்கையை |

| | | |
|---|---|---|
| புனைவார் | = | அணியும் பரமசிவனது |
| குமார! | = | மைந்தனே! |
| திமிர | = | இருள் நிறமுடைய |
| முந்நீர் | = | கடல் சூழ்ந்த |
| தென் | = | அழகிய |
| தலை | = | பூதேவிக்கும் |
| அம்புயம் | = | செந்தாமரைப்பூவில் வாசஞ் செய்கின்ற |
| மின் | = | சிதேவிக்கும் |
| கோ | = | நாயகனாகிய திருமாலினது |
| மருக! | = | மருகோனே! |
| செழு | = | செழுமை தங்கிய |
| மறை தேர் | = | நான்கு வேதங்களுந் துதிக்கின்ற |
| தென் தலை | = | தெற்கின்கண்ணதாகிய |
| அம் | = | அழகிய |
| புசக | = | பாம்பு போன்ற |
| பூதா | = | திருச்செங்கோட்டுமலையாதிபனே! |
| எரி | = | அக்கினியை |
| சிந்தி | = | கொட்டிக்கொண்டு |
| மன்றல் | = | வாசனை தோய்ந்த |
| தென்றல் | = | தென்றற்காற்றானது |
| ஐ அம்பு | = | என் தேகத்தில் பஞ்ச பாணங்களும் |
| படு | = | தைத்த |
| நெறி | = | புண்வழியே |
| போய் | = | நுழைந்து |
| உயிர் | = | என்னுயிரை |
| தீர்க்கின்றது | = | (வருத்தி) நீக்குகின்றது. |

தென்றல் - எழுவாய், தீர்க்கின்றது - பயனிலை, ஏ—அசை,

(க—ரை) கங்கையைச் சூடிய பரமசிவனது மைந்தனே! பூதேவி சிதேவிகளின் நாயகனான திருமால் மருகோனே! வேதங்கள் துதிக்கின்ற பாம்புபோன்ற திருச்செங்கோட்டு மலையில் வாழ்பவனே! காமபாணங்

லைத்த புண் வழியே தென்றற்காற்று என்னுடலி னுழைந்து உயிரை வருத்துகின்றது. (௮௨)

தீரா கமல சவிகித போக மெனத்தெளிந்துந்
தீரா கமல மெனக்கரு தாதகதென் சேயவநூல்
தீரா கம!ல குகரம் பொறுப்ப னெனத்திருக்கண்
தீரா கமல மரவே கருகச் சிவந்தவனே!

(ப-ரை) சேய் = குமாரக்கடவுளே!
அவம் = பயனின்மையான
நூல் = சாஸ்திரங்களை
தீர் = நீங்கிய
ஆகம ! = பரிசுத்தமான ஆகம முறைத் தோனே!
லகு = (அக்கினியானவன் 'இப்பொறி) அற்பமானது,
கரம் = கையில்
பொறுப்பன் = தாங்கிக் கொள்வேன்'
என = என்று சொல்ல
திருக்கண் = உனது சிறந்த விழியினுலே
தீ = அவ் வக்கினியினது
ராகம் = காந்தியோடுற்ற சிவந்த நிறமெல் லாம்
அலமரவே = வருத்தமுற்றே
கருக = கருகும்படி
சிவந்தவனே! = கோபித்தவனே!
தீரா = நீங்காமல்
கமல = விஷ்ணுவினதுநாபிக்கமலத்தில்
ச = சனித்த பிரம்மா
லிகிதபோகம் என = எழுதிய தலைவிதிப் பிராப்த மென்று
தெளிந்தும் = அறிந்திருந்தும்

| | |
|---|---|
| தீ | = என்னறிவானது |
| ராகம் | = 'இச்சையினல் |
| அலம் என | = இனிய பயனுடையோம் அல்லேம்' என்று |
| கருதாதது | = சிந்தியாதது |
| என் | = என்ன காரணம்? |

அறிவு - எழுவாய், கருதாததென் - பயனிலை. ஏ - அசை.

(க-ரை) குமாரக்கடவுளே! பரிசுத்த வேதாகம மொழிந்தோனே! 'இக்கனற்பொறி லதுவானது, நான் காத்திற்றுங்கிக்கொள்வேன்' என்று வன்மை பேசின அக்கினியின் வீறடங்கிபுடல் கருகக் கோபித்த விழியை யுடையவனே! கமலோற்பவனுன பிரம்மா விதியி னறுபவந் தவறுதென்று தெளிந்தும், எனதறிவானது 'ஆசை பயன் படுவதன்று' என்று கருதாத தென்ன?

சிவசிவ சங்கா வேலா யுத! தினை வஞ்சிகுறிஞ்
சிவசிவ சங்கா வாமயில் வீர! செகந்திருக்கண்
சிவசிவ சங்கா மாவை யெனுந்திற லோய்! பொறைவா
சிவசிவ சங்கா மான்பட்ட வாவொளி சேர்ந்தபின்னே.

(ப-ரை)

| | |
|---|---|
| சிவ | = ஏகவஸ்துவான |
| சிவ | = பரமசிவனிடத்தில் |
| சம் | = உற்பவித்த |
| கா | = திருக்காத்தில் |
| வேலாயுத! | = வேலாயுதத்தையுடைய முருகோனே! |
| தினை | = தினைப்புனத்தை யுடைய |
| வஞ்சி | = பெண்ணுகிய |
| குறிஞ்சி | = குறிஞ்சிநிலத்தில் |
| வசி | = வாசஞ் செய்கின்ற வள்ளி நாயகியினது |

| | | |
|---|---|---|
| வசம் காவா | = | பக்கத்தைவிட் டகலாத |
| மயில்வீர! | = | மயிலேறுஞ் சேவகனே! |
| செகம் | = | உலகத்தின்கண் |
| திரு | = | சிறந்த |
| கண் | = | விழியினால் |
| சிவ | = | கோபி |
| சிவ | = | கோபி |
| சங்கர | = | எல்லாரையு மழிக்கின்ற |
| மாவை | = | சூரனுருக்கொண்ட மாமரத்தை |
| எனும் | = | என்று வேலாயுதத்தையேவும் |
| திறலோய்! | = | வீரனே ! |
| ஒளி | = | உனது திருவருளாகிய பிரகாசம் |
| சேர்ந்த பின் | = | என்னிற் கலந்தவுடனே |
| பொறை வாசி | = | மிகுந்த பொறுமை யென்னும் பாணத்தின் |
| வசி வசம் | = | கூர்மையினிடத்தில் |
| கர | = | கோப முதலிய |
| மான் பட்ட | = | மிருகங்கள் விழுந்துவிட்டன. |

காமான் – எழுவாய், பட்ட - பயனிலை. ஏ-அசை, ஆ-அசை.

(க-ரை) ஏகவஸ்துவான பரமசிவனது மைந்தனாகிய வேலாயுதத்தை யுடையோனே! தினைப்புனத்தில் வாழ்கின்ற வள்ளிநாயகனே! மயிலேறும் வீரனே! மா வடிவாய் நின்ற சூரனை வென்ற வீரனே! நின் திருவருளின் பிரகாசத்தினால் எனது கோபமென்னும் மிருகம் பொறுமை யென்னு மாயுதத்தா லழிந்த தன்மையதாயிற்று. (அச)

சேந்த! மராத்துடர் தானவர் சேனையைத் தெண்டிரைக்கண்
சேந்த மராத்துடன் கொன்றசெவ் வேல! திருமுடிமேற்
சேந்த மாாத்துட ரச்சூடி மைந்த! திளைத்திளைத்தேன்
சேந்த மாாத்துட ரின்னரி யென்னுமிச் சேறுபுக்கே.

| | | |
|---|---|---|
| (ப-ரை) சேந்த! | = | கந்தனே! |
| மராத்துடர் | = | கடப்பமாலிகையைப்புனைந்து |
| தானவர் சேனையை | = | அசுரர் கூட்டங்களை |
| தென் | = | தெளிந்த |
| திரை | = | அலையையுடைய கடலினிடத்தில் |
| கண் சேந்து | = | விழிகள் சிவந்து |
| அ | = | அந்த |
| மராத்துடன் | = | மாமரமாய் நின்ற சூரனுடன் |
| கொன்ற | = | வதை செய்த |
| செவ் வேல! | = | சிவந்த வேலாயுதத்தையுடையோனே! |
| திரு முடிமேல் | = | அழகிய சிரசின்கண் |
| சே | = | இளமையான |
| இந்து | = | சந்திரனையும், |
| அம் | = | கங்காசலத்தையும், |
| அரா | = | சர்ப்பத்தையும் |
| துள் | = | துள்ளலை |
| தர | = | கொடுக்கும்படி |
| சூடி | = | தரித்த பரமசிவனது |
| மைந்த! | = | புதல்வனே! |
| தமரா | = | சுற்றத்தாராக |
| துடர் | = | பற்றிய |
| இல் | = | மனைவாழ்க்கையும் |
| நாரி | = | பெண்ணாசையும் |
| என்னும் | = | என்று சொல்லப்பட்ட |
| இ சேறு | = | இந்தச் சேற்றில் |
| புக்கு | = | பிரவேசித்து |
| திளைத்து | = | மூழ்கி |
| இளைத்தேன் | = | மெலிந்து வருந்தினேன்; |
| சே | = | என்னைக் காத்தருள்வாய். |

நீ - தோன்றி எழுவாய், சே - பயனிலை. ஏ - அசை.

(கு-ரை) கடப்பமாலையைப் புனையுஞ் சேந்தனே! சமுத்திரத்தின் கண் மாமரமாய்நின்ற சூரனோடு அசுரர்கிளைபை யழித்த வேலாயுதனே! சந்திரனையும் கங்கையையும் சர்ப்பாபரணத்தையும் தரித்த பரமசிவனது மைந்தனே! என்னைச் சூழ்ந்திராநின்ற சுற்றத்தார் மனைவி மனை என் னுஞ் சேற்றில் மூழ்கி வருந்துகின்றேன்; இனியாகிலு மென்னைக் காப் பாற்றவேண்டும். (அரு)

சேறலைத் தாறலைக் கப்பா லெழுந்து செழுங்கமுகிற்
சேறலைத் தாறலைக் குஞ்செந்தி லாய்! சிந்தை தீநெறியிற்
சேறலைத் தாறலைத் தீர்க்குங் குமார! திரியவினைச்
சேறலைத் தாறலைக் கத்தகு மோமெய்த் திறங்கண்டுமே.

(ப-ரை)

| | |
|---|---|
| சேறு | = சேற்றை |
| அலைத்து | = உழக்கி |
| ஆறு | = ஆற்றினின்றும் |
| அலைக்கு அப்பால் எழுந்து | = அலைகளுக்குமே லெழும்பி |
| செழும் | = செழுமை தங்கிய |
| கமுகில் | = கமுகமரத்தில் |
| சேல் | = சேற்கெண்டையானது |
| தலை | = அக் கமுகின் தலையிலிருக்கின்ற |
| தாறு | = குலைகளை |
| அலைக்கும் | = அலைக்காநின்ற வளப்பத்தையுடைய |
| செந்திலாய் ! | = திருச்செந்தில் நாயகனே! |
| சிந்தை | = என் மனமானது |
| தீ நெறியில் | = கொடிய மார்க்கத்தில் |
| சேறலை | = செல்லுதலையும் |
| தாறு | = அளவுபடாத |

| | | |
|---|---|---|
| அலை | = | அஞ்ஞானவிருளை யடைதலையும் |
| தீர்க்கும் | = | நீக்கி யருளுகின்ற |
| குமார! | = | குமாரக்கடவுளே! |
| மெய் திறம் | = | உனதருளி னுண்மைத் திறத்தை |
| கண்டும் | = | கண்டு அதுவே பற்றாயிருக்க எண்ணுகிற என்னை |
| திரிய | = | மாறுபடும்படி |
| வினை | = | இருவினையாகிய |
| சேறு | = | சேற்றின்கண் |
| அலைத்து | = | துன்பப்படுத்தி |
| ஆறு அலைக்கத் தகுமோ | = | வழிபறிப்போர்போ லென்னுயிரைக் கவரத்தகுமோ? |

நீ - தோன்றா எழுவாய், ஆறலைக்கத்தகுமோ - பயனிலை.

(க-ரை) சேற்றை யுழக்கி யாற்றினின்று மலைகளுக்கு மேலெழும்பிக் கமுகின் குலையை யலைக்குஞ் செந்திற்பதியோனே! அடியார்களது அஞ்ஞானவிருளை நீக்கி யவரை நன்னெறியிற் செலுத்துங் குமாரக் கடவுளே! உன் அருளின் திறத்தைக் கண்டறிந்த என்னை யிருவினைச் சேற்றி னுட்படுத்தலாகுமோ? [தவிர்த்தாளவேண்டுதல் - குறிப்பு.] (அ௩)

திறம்பா டுவர்தன் புனத்தெய்வ மேயென்பர் சேதத்துமாந்
திறம்பா டுவர்முது நீரெனக் காய்பவர் செந்திலைமேல்
திறம்பா டுவரிதழ் கண்டுரு காநிற்பர் செப்புறச்செந்
திறம்பா டுவரி விவர்வல் லவர்கஞ் செயல்கொள்ளவே.

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | திறம் | = | நமது வெற்றியை |
| | பாடுவர் | = | துதிக்கின்றார்; |
| | தன் | = | 'தண்ணிய |

| | | |
|---|---|---|
| புன | = | புனத்தில் வாழும் |
| தெய்வமே | = | தேவதையே!' |
| என்பர் | = | என்று அழைக்கின்றார்; (அவர் யாரெனில்) |
| உவர் | = | 'உவர்ப்பையுடைய |
| முது | = | பழமையாகிய |
| நீர் | = | கடலின்கண்ணே |
| சேதத்து | = | கேட்டையுடைய |
| மாந்திறம் | = | வலி பொருந்திய மாமரமாய் நின்ற சூரன்றன் கிளேயோடு |
| பாடு | = | அழிந்தான்' |
| என | = | என்று (தேவர்கள் சொல்லும்படி) |
| காய்பவர் | = | கோபித்தவராகும்; |
| செம் | = | சிவந்த |
| திணைமேல் | = | திணைப்புனத்தின்கண் |
| திறம்பாள் | = | நீங்காதிருக்கின்றவளாகிய வள்ளி நாயகியே! உனது |
| துவர் | = | பவழம்போன்ற |
| இதழ் கண்டு | = | அதரத்தைப் பார்த்துக்கொண்டே |
| செப்புற | = | ஏதோவொரு வார்த்தை சொல்லுவதற்காகவே |
| உருகாநிற்பர் | = | மனமுருகி நிற்கின்றார்; |
| செந்தில் | = | செந்திற்பதியென்னும் |
| தம்பாடு | = | தம்மிடத்தில் |
| வரில் | = | வருவாரானல் |
| நம் | = | நமது |
| செயல் | = | உபசாரச் செய்கையை |
| கொள்ள | = | பெற்றுக்கொள்வதற்கு |
| இவர் | = | இப்பேர்ப்பட்டவர் |
| வல்லவர் | = | சாமர்த்தியரே. |

இவர் - எழுவாய், வல்லவர் - பயனிலே.

(க-ரை) நாயகியே! 'சமுத்திரத்தின்கண் சூரன் கிளையோடு அழிந்தான்' என்று தேவர்கள் சொல்லும்படி வதைத்தவர், வந்து ஏதோவொரு வார்த்தைசொல்லும்பொருட்டு இங்கே நமது வெற்றியைப் புகழுகின்றார்; 'புனத்தெய்வமே!' என் றழைக்கின்றார்; தினைப்புனத்திலிருக்கு முனது பவழநிறம்போன்ற இதழைப் பார்த்து மனதுருகிநிற்கின்றார். இவர் தமது செந்திற்பதியில் வருவாராஞல் நாம் செய்யு முபசாரத்தைப் பெற வல்லவர்தாம். (அஎ)

செயலங் கைவாளை யிறைகோயி லேச்சிவ ஞாமுதைச்
செயலங் கைவாளை முனிகொண்டல் வாளியைத் தேவர்பிரான்
செயலங் கைவாளை முனைவேலை யன்னவிச் சேயுறையுஞ்
செயலங் கைவாளை யுகள்செந்தில் வாழ்பவள் சேல்விழியே.

(ப-ரை) இ சேய் உறையும் = இக்குமாரக்கடவுள் அமர்ந்தருளிய
செய் = வயலை யுழுகின்ற
அலம் = கலப்பையை
கை = கோபித்து மோதி
வாளை = வாளைமீன்கள்
உகள் = புரளுகின்ற(வளப்பத்தையுடைய)
செந்தில் = திருச்செந்திற்பதியில்
வாழ்பவள் = வாழும் பெண்ணினது
சேல் = சேற்கெண்டை போன்ற
விழி = கண்களிரண்டும்
செயல் = சேற்றி லுண்டாகின்ற
அம் = அழகிய
கை = ஒப்பற்ற
வாள் = ஒளி பொருந்திய
ஐ = சிரேஷ்டமான
இறை = பிரம்மாவின்
கோயிலை = ஆலயமாகிய தாமரையையும்,

| | | |
|---|---|---|
| சிவனார் | = | பரமசிவ னுண்ட |
| அமுதை | = | விஷத்தையும், |
| செய | = | வெற்றி பொருந்திய |
| லங்கை | = | இலங்காபுரியினது |
| வாளை | = | பிரகாசத்தினழகை |
| முனி | = | கோபித்த |
| கொண்டல் | = | மேகநிறத்தையுடைய ஸ்ரீராமரது |
| வாளியை | = | பாணத்தையும், |
| தேவர்பிரான் | = | தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனது |
| செயல் | = | போர் புரிகின்ற |
| அங்கை | = | அங்கையிற் பற்றிய |
| வாளை | = | வாளாயுதத்தையும், |
| முனை | = | கூர்மை பொருந்திய |
| வேலை | = | வேலாயுதத்தையும் |
| அன்ன | = | ஒத்து விளங்காநின்றன. |

விழி - எழுவாய், அன்ன — பயனிலை, ஏ - அசை.

(க-ரை) குமாரக்கடவு ளமர்ந்தருளிய திருச்செந்திற்பதியில் வாழும் பெண்ணினது கண்கள் பிரம்மாவுக்கு உறைவிடமாகிய தாமரையையும், இலங்கையை யழித்த ஸ்ரீராமரது பாணத்தையும், பரமசிவனுண்ட நஞ்சையும், இந்திரன் கைவாளையும் ஒத்து விளங்குகின்றன. ()

சேலையி லாருந் தவன்சூல மேறச் சினத்தவன்கண்
சேலையி லாருந் திவனேற் பவையார சிந்திரியச்
சேலையி லாரும் பராபரி புக்குறச் சிக்கெனுமிச்
சேலையி லாருந் திறையிட் டனர்தங்கள் சித்தங்களே.

(ப-ரை)

| | | |
|---|---|---|
| சேலை | = | அசோகமரத்தை |
| இல் ஆர் | = | இல்லிடமாக வுடையஅமணர்கள் |
| உந்து | = | உயர்ந்து |

| | | |
|---|---|---|
| அ | = | அந்த |
| வன் | = | வலிய |
| சூலம் | = | கழுவில் |
| ஏற | = | ஏறி யழியும்படிக்கு |
| சினத்தவன் | = | சம்பந்தப்பிள்ளையாய்த் தேவாரம் பாடி ஜெயித்தவன், |
| கண் | = | விழியானது |
| சேல் | = | சேற்கெண்டைக்கும் |
| ஐயில் | = | வேலுக்கும் |
| ஆர் | = | ஒப்பாகிய |
| உந்தி | = | கான்யாற்றையுடைய |
| வன உறபவை | = | வனத்தி லுற்பவித்த வள்ளிநாயகிக்கு |
| அரசு | = | தலைவனான குமாரக்கடவுள் |
| இந்திரியச்சேலை | = | பஞ்சேந்திரியச் செய்கைகளை |
| இல்லார் | = | நீக்கிய தபோதனர்கட்கும் |
| உம்பர் | = | தேவர்கட்கும் |
| ஆப | = | துன்பத்தை விளைத்த |
| ரிபு | = | சத்துருவாகிய சூரனை |
| குற | = | குற்றும்படி |
| சிக்கெனும் | = | இறுக்கிக் கட்டிய |
| இ சேலையில் | = | பீதாம்பரக் கச்சையில் |
| ஆரும் | = | மாதர்க ளெல்லாம் |
| தங்கள் | = | தங்கடங்கள் |
| சித்தங்கள் | = | இருதயங்களை |
| திறை இட்டனர் | = | கப்பமாகச் சமர்ப்பித்தார்கள். |

ஆரும் - எழுவாய், திறையிட்டனர் - பயனிலை. ஏ - அசை.

(க-ரை) சம்பந்தப்பிள்ளையா யவதரித்துச் சமணரைக் கழு வேறும்படி செய்தவனும், வள்ளிநாயகிக்குத் தலைவனுமாகிய குமாரக் கடவுள் தேவர் முதலியோரை வருத்திய சூரனை வெல்லும்படி அழ

ஙிய அரையிற் கட்டிய பீதாம்பரக் கச்சையினிடத்தில் மாதர்களெல்லாருந் தங்கடங்க ளிருதயங்களைக் கப்பமாகச் சமர்ப்பித்தார்கள் (அகூ)

சித்தத் தரங்கத்தர் சித்திபெய் தத்திரி கின்றதென்னர்ச்
சித்தத் தரங்கத்தர் சந்ததி யே!செந்தி லாய்!சலரா
சித்தத் தரங்கத்த ரக்கரைச் செற்றகந் தா! திங்களிஞ்
சித்தத் தரங்கத்தர் சேயா ரணத்தந் திகிரியையே.

(ப-ரை)

அத்தர் = சுவாமியாகிய
அங்கத்தர் = எலும்பை மாலையாக வணிந்த பரமசிவனது
சந்ததியே! = மைந்தனே!
செந்திலாய்! = திருச்செந்திற்பதியோனே!
சலராசி = சமுத்திரத்தின்கண்
தத்தரம் = தங்கள் தங்கள் வலிமையை
கத்து = ஆர்ப்பரித்துச் சொல்லிய
அரக்கரை = அசுரரை
செற்ற = செயித்த
கந்தா! = முருகனே!
திங்கள் = சந்திரன்
இஞ்சி = மதிலின்கண்
தத்து = தவழுகின்ற
அரங்கத்தர் = திருவரங்கநாதருடைய
சேய் = பிள்ளையாகிய (பிரம்மாவின்)
ஆரணம் = வேதம் பூசிக்கின்ற
தந்தி = பாம்புபோன்ற
கிரி = திருச்செங்கோட்டு மலையில் வாழும்
ஐ! = சுவாமியே!
சித்த = இருதயமானது
தரங்கத்தர் = நிலைப்படாம லலைபோற் புரளுந் தன்மையை யுடையவர்
அர்ச்சித்து = பூசைசெய்தே
சித்தி = மோக்ஷத்தை

| | | |
|---|---|---|
| எய்த | = | அடையும்படி |
| திரிகின்றது | = | அலைந்து திரிகின்றது |
| என் | = | என்ன காரணம்? |

திரிகின்றது - எழுவாய், என் - பயனிலை. ஏ - அசை.

(க-ரை) திருச்செந்திற்பதிக் கதிபனே! சமுத்திரத்தின்கண் அரக்கரை மாய்த்தோனே! கந்தனே! வேதம் பூசித்த திருச்செங் கோட்டு மலையில் வாழ்கின்றவனே! பரமசிவனது மைந்தனே! சித்த நிலையற்றவர்கள் வெளிப்பூசை செய்து மோக்ஷத்தை யடையும்படி அலைந்து திரிகின்ற தென்ன காரணம்? (கூ0)

திகிரி வலம்புரி மாற்கரி யார்க்குப தேசஞ்சொன்ன
திகிரி வலம்புரி செய்யா ரிலஞ்சிசெந் தூர்கனதந்
திகிரி வலம்புரி வேறும் படைத்தருள் சேய்தனியில்
திகிரி வலம்புரி சூடிய வாநன்று சேடியின்றே.

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | சேடி | = | தோழியே! |
| | இன்று | = | இன்றையத்தினம் |
| | திகிரி | = | சக்கராயுதத்தை |
| | வலம் | = | வலது கரத்தில் |
| | புரி | = | தரித்த |
| | மாற்கு | = | விஷ்ணுவுக்கு |
| | அரியார்க்கு | = | அறிதற்கரிதான பரமசிவனுக்கு |
| | உபதேசஞ்சொன்ன | = | ஓங்காரப்பொருளை யுபதேசித்தருளிய |
| | திகிரி | = | சுவாமிமலை யென்னுந் திருவேரகத்தையும் |
| | வலம்புரி | = | சங்கினங்கள் |
| | செய் | = | வயல்களின்கண் |
| | ஆர் | = | நிறைந்திருக்கின்ற |

| | | |
|---|---|---|
| இலஞ்சி | = | திருவிலஞ்சிப் பதியையும் |
| செந்தூர் | = | திருச்செந்தூரையும் |
| கன | = | மேகங்கள் தவழாநின்ற |
| தந்தி | = | பாம்புபோன்ற |
| கிரி | = | திருச்செங்கோட்டு மலையையும் |
| வலம் | = | திருவலத்தையும் |
| புரி வேறும் | = | மற்றை ஸ்தலங்களையும் |
| படைத்தருள் | = | தனக்கு உறைவிடமாகக்கொண்டருளிய |
| சேய் | = | குமாரக் கடவுளது |
| தணியில் | = | திருத்தணிகையில் |
| திகிரி | = | மூங்கிலானது |
| வலம்புரி | = | நந்தியாவட்டத்தை |
| சூடியவா | = | சூடிய விதத்தின் குறி |
| நன்று | = | நன்ருக விருக்கின்றது. |

சூடியவா - எழுவாய், நன்று - பயனிலை. எ - அசை.

(க-ரை) தோழியே! பரமசிவனுக்கு உபதேசித்த சுவாமிமலை, திருவிலஞ்சி, திருச்செந்தூர், திருச்செங்கோட்டுமலை, திருவலம், இவை முதலாகிய பல வேறு ஸ்தலங்களிலு முறைந்தருளிய குமாரக்கடவுளது திருத்தணிகைமலையில் மூங்கில்ன்மேல் நந்தியாவட்டத்தைச் சூடியிருக்குங் குறி நன்ரு யிருக்கின்றது. (கக)

சேடி வணங்கு வளைத்தோ ளெனப்புணர் சேய! வட
சேடி வணங்கு திருத்தணி காவல! நின்செருக்காற்
சேடி வணங்கு கொடியிடை யாளையென் செப்புமுலை
சேடி வணங்கு தலைக்களி நீந்தது செல்லநில்லே.

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | சேடு | = | அழகியதாகும் |
| | இ | = | இந்த |
| | அணங்கு | = | மங்கையினது |

| | | |
|---|---|---|
| வளை | = | வளையலை யணிந்த |
| தோள் என | = | தோளென்று மிகவு மகிழ்ந்து |
| புணர் | = | முன் வேண்டினகாலத் தென்னை மணம் புணர்ந்த |
| சேய! | = | முருகனே! |
| வட சேடி | = | வடக்கின்கண்ணதாகிய விஞ்சையருலகம் |
| வணங்கு | = | வழிபடத்தக்க |
| திருத்தணி | = | திருத்தணிகைக்கு |
| காவல! | = | தலைவனே! |
| நின் | = | நினது |
| செருக்கால் | = | செருக்கினால் |
| சேடி | = | கர்விக்கிருக்கின்ற |
| வணங்கு | = | துவளாநின்ற |
| கொடி | = | கொடிபோன்ற |
| இடையாரை | = | இடையையுடைய பரத்தையரை |
| என் செப்பு | = | நிந்தித்துப் பேசவேண்டிய காரணமென்ன விருக்கின்றது? |
| முலைச் சேடு | = | எனதுகொங்கையின் திரக்ஷியை |
| இவணம் | = | இப்படித் திரட்சியின்மை யாகும்படி |
| குதலை | = | மழலைச்சொல்லையுடைய |
| களிறு | = | என் பாலன் |
| ஈந்தது | = | தந்துவிட்டது (ஆதலால்) |
| செல்ல | = | என்னிடத்து வாராமற் செல்லும்படி |
| நில் | = | தூரமாக நில்லு. |

நீ -'தோன்று எழுவாய், நில் - பயனிலை, ஏ - அசை.

(க-ரை.) தணிகைமலையில் வாழ்வோனே ! பண்டென்னை மிகவு மழகுடையவளென்று மணம் புணர்ந்த சேயோனே ! நீ இப்போது கலந்த களிப்பான் மிகுதி யடைந்த பரத்தையரை யான் நிந்தித்துப்

பேசவேண்டிய காரண மென்ன விருக்கின்றது? எனது யௌவன பருவத்தை இம் மழலைச் சொல்லையுடைய பாலகன் வேறுபடுத்தின னுதலால் அப் பரத்தையர்பாற்றுனே செல்! என்பால் வரவேண்டிய தில்லை. (சூ௨)

செல்லலை யம்பொழில் சூழ்செந்தி லானறி யானிறைகைச்
செல்லலை யம்பொழி லெங்கணு மேற்ப வெனத்தெறித்த
செல்லலை யம்பொழி லங்கைக் கருடிரு மானிறம்போற்
செல்லலை யம்பொழி லாகவ மாதுயிர் சேதிப்பதே.

(ப-ரை) இறை = பரமசிவனது
கை = கரத்தில்
செல்லல் = போகாதே
ஐயம் = பிச்சைக்கு
பொழில் எங்கணும் = உலகமெங்கும்
எற்ப = இறக்கும்படியாய்
என = என்று
தெறித்த = சமதிரத்தைப்பிரமகபாலத்தில் தெறித்தவரும்,
செல்லல் = துன்பத்தையும்
ஐயம் = பயத்தையும்
பொழில் = பெருமையையு முடைய
லங்கைக்கு = இலங்காபுரிக்கு
அருள் = உண்டாக்கினவருமாகிய
திருமால் = ஸ்ரீராமரது
நிறம்போல் = நீலநிறத்தைப்போல
செல் = நடக்கின்ற
அல் = இராக்காலத்தில்
ஐ அம்பு = மன்மதனது பஞ்சபாணமானது
ஒழி = அழியும்படி

லாகவம் = மிகவு நொய்யதான
மாது உயிர் = மங்கையி னுயிரை
சேதிப்பது = வதைக்கின்றதை
செல் = மேகத்தை
அலை = அசைக்கின்ற
அம் = அழகிய
பொழில் சூழ் = சோலை சூழ்ந்த
செந்திலான் = திருச்செந்திற்பதியையுடைய வன்
அறியான் = அறிகின்றானில்லை.

செந்திலான் - எழுவாய், அறியான் - பயனிலை. ஏ - அசை.

(க-ரை.) பரமசிவனது கையி லிருக்கின்ற பிரம்ம கபாலத்தில் தமது இரத்தத்தைப் பலியாக வார்த்தவரும், இலங்காபுரியைச் செயித்த வருமான விஷ்ணுவின் நிறம்போ லிருண்ட இராக்காலத்திற் காம பாணங்கள் இம் மங்கையி னுயிரைப் பிளக்கின்றதைச் செந்தில் நாயகன் அறியானோ? (சுரு)

சேதிக் கணைத்து களதாக்கு நோக்கினன் செல்வ! செந்திற்
சே! நிக் கனைத்து நிலைபெறச் சூரங்கள் சிரங்கமால்
சேதிக் கனைத்து வரிதோ யயில்கொடெற் சேர்க்கவந்தாற்
சேநிக் கனைத்து வருமா மறலி திறலினையே.

(ப-ரை) சேத = சிவந்த
இக்கனை = கருப்புவில்லையுடைய மன் மதனை
துகளதாக்கும் = சாம்பலாகும்படி யெறித்த
நோக்கினன் = நெற்றிக்கண்ணையுடைய பரம சிவனது
செல்வ! = மைந்தனே!
செந்தில் சே! = திருச்செந்தூர் முருகனே!

| | | |
|---|---|---|
| திக்கு அனைத்தும் | = | திசைகளெல்லாம் |
| நிலபெற | = | நிலபெற்றிருக்கும்படியாயும் |
| சூர் | = | சூரனுடைய |
| அங்கம் | = | உடலை |
| சீரங்கம் | = | திருவரங்கத்தில் வாசஞ்செய்கின்ற |
| மால் | = | விஷ்ணுவினது |
| சே | = | பிள்ளையாகிய பிரம்மா |
| திக்க | = | திகைக்கும்படி |
| நைத்து | = | அழித்து |
| உவரி | = | சமுத்திரத்தில் |
| தோய் | = | மூழ்கிய |
| அயில் கொடு | = | வேலாயுதத்தைக் கொண்டு, |
| என் சேர்க்க வந்தால் | = | என்னை யமபடான் கட்டிக் கொண்டு போக வந்தால், |
| கனைத்து வரும் | = | கனைத்துக்கொண்டு வாரநின்ற |
| மா மறலி | = | பெரிய யமனது |
| திறலினை | = | உக்ர வல்லமையை |
| சேதி | = | கண்டிப்பாயாக. |

நீ - தோன்று எழுவாய், சேதி - பயனிலை. ஏ - அசை.

(க-ரை) கருப்பு வில்லையுடைய மன்மதனை யெரித்த நெற்றிக் கண்ணையுடைய பரமசிவனது மைந்தனே! திருச்செந்திற் பதியில் வாழ்கின்ற சுவாமியே! நீ பிரமன் திகைக்கவும், திக்குகளெல்லா நிலபெறவும், சூரனை வென்று சமுத்திரத்திற் றோய்ந்த வேலாயுதத்தினலே, என்னைக் கட்டிக்கொண்டுபோக வரும் யமனது வலியைச் சேதிக்கவேண்டும். ()

திறவா வனக புரிவாச ஸீக்கச் சிகரிநெஞ்சந்
திறவா வனச முனியைவென் றேய்!தென் றிசைத்திருச்செந்
திறவா வனமயி லோயந்த காலமென் சிந்தைவைக்கத்
திறவா வனநின் றிருவான தண்டைத் திருவடியே.

(ப-ரை) அனய = பாவமற்ற
புரி = கைலாயத்தினது
வாசல் = கதவை
நீக்க = திறக்க
திறவு = திறவுகோல்
ஆ = ஆனவனே!
சிகரி = கிரவுஞ்சகிரியினது
நெஞ்சம் = மார்பை
திறவு = பிளந்து
ஆ = ஆச்சரியமாக
வனச = தாமரையில் வாசஞ்செய்கின்ற
முனியை = பிரமனையும்
வென்றோய்! = செயித்தவனே!
தென் திசை = தெற்கின்கண்ணதாகிய
திருச்செந்தில் = திருச்செந்தூரில்
தவா = நீங்காதமர்ந்தருளுகின்ற
வன = அழகிய
மயிலோய் = மயில்வாகனத்தை யுடையவனே!
அந்த காலம் = என்னுடல்கெடும் அனித்தியகாலத்தில்
என் சிந்தை = எனது சிந்தனையை
வைக்க = ஒருவழிப்படுத்திச் சேர்ப்பதற்கு
திறவாவன = அடைக்கல ஸ்தானமெவையெனில்,
நின் = நினது
திரு ஆன = சிறப்பையுடையனவாகிய
தண்டை = தண்டையை யணிந்த
திருவடி = திருவடியே.

திருவடி - எழுவாய், திருவாவன - பயனிலை. ஏ - அசை.

(க-ரை) கயிலாயத்தின் கதவு திறக்கும்படி செய்கின்றவனே! கிரவுஞ்சகிரியைப் பிளந்து பிரம்மாவையும் வென்றோனே! தெற்கின் கண்ணதாகிய திருச்செந்தூரில் வாழும் மயில்வாகனனே! என் அனித்

நிய காலத்தி லுனது தண்டை யணிந்த தாளே யென் சிந்தையை வைக்கும் அடைக்கல ஸ்தானமாம். (கூரு)

திருக்கையம் போதிகளோ! கஞ் சமோ! நஞ்ச மோ! திருமால்
திருக்கையம்போ! செய்யவேலோ! விலோசனந் தென்னனங்கத்
திருக்கையம்போருகக் கைந்நீற்றின் மாற்றித் தென் னூல்சிவபத்
திருக்கையம் போகவுரைத் தோன் சிலம்பிற் சிறுமிதற்கே.

(ப-ரை)

| | | |
|---|---|---|
| தென்னன் | = | கூன்பாண்டியனது |
| அங்கத் திருக்கை | = | முதுகின் கூனை |
| அம்போருகம் | = | தாமரை மலர்போன்ற |
| கைந்நீற்றின் | = | கரத்திற் றரித்த திருநீற்றினல் |
| மாற்றி | = | நீக்கி |
| தென் னூல் | = | தமிழ் நூலாகிய |
| சிவபத்தி | = | சிவபத்தியை விளைவிக்கும் |
| ருக்கு | = | ருக்குவேதசாரமாகிய (தேவாரத்தை) |
| ஐயம் போக | = | பரசமய நூல்களினு லுண்டாகுஞ் சந்தேக நிவர்த்தியாக |
| உரைத்தோன் | = | சம்பந்தப்பிள்ளையா யவதரித்துத் திருவாய்மலர்ந்தருளிய குமாரக் கடவுளது |
| சிலம்பில் | = | மலையின்கணிருக்கின்ற |
| சிறுமிதற்கு | = | சிறியாளாகிய கன்னிக்கு |
| விலோசனம் | = | கண் |
| திருக்கை | = | திருக்கையென்னு மீனையுடைய |
| அம்போதிகளோ! | = | சமுத்திரங்களோ! |
| கஞ்சமோ! | = | தாமரையோ! |
| நஞ்சமோ! | = | விஷமோ! |
| திருமால் | = | விஷ்ணுவினது |
| திருக்கை | = | திருக்கரத்தி லிருக்கின்ற |
| அம்போ! | = | பாணமோ |

| | | |
|---|---|---|
| செய்ய | = | சிவந்த |
| வேலோ! | = | வேலாயுதமோ! |

விலோசனம் - எழுவாய், சமுத்திரமுதலிய - பயனிலை. எ - அசை

(க-ரை) முன் சம்பந்த மூர்த்திபா யவதரித்துத் திருநீற்றுற் சமணமதம் பூண்டிருந்த பாண்டியனது கூனை மாற்றியும், 'எச்சமயம் பெரிதோ' என்னு மையமற்றுச் 'சைவமே பெரிது' என்று நம்பும்படி தமிழ் வேதமாகிய தேவாரத்தை மொழிந்தருளிய குமாரக்கடவுளது மலையின் கண் வாழும் கன்னியினது கண்: சமுத்திரமோ! தாமரையோ! விடமோ! அம்போ! வேலோ! (கூக)

சிறுமிக் குமர நிகர்வீர் பகிரச் சிதையுயிர்ந்தச்
சிறுமிக் குமர சாணமென் னீருய்விர் செந்தினைமேற்
சிறுமிக் குமர! புரைத்துநின் றேன்சிலை வேட்டுவனெச்
சிறுமிக் குமர வணிமுடி யான்மகன் சீரடிக்கே.

(ப-ரை)

| | | |
|---|---|---|
| செம் | = | சிவந்த |
| தினைமேல் | = | தினைப்புனத்தில் வாசஞ்செய்த |
| சிறுமிக்கு | = | வள்ளிநாயகிக்கு |
| மரபு | = | தமது மரபின் வழிகளை |
| உரைத்து | = | எடுத்துரைத்து |
| நின்றேன் | = | குறையிரந்து நின்றவனும், |
| சிலை | = | வில்லையுடைய |
| வேட்டுவன் | = | வேடத்திருமேனியையுடைய கண்ணப்ப நாயனர் |
| எச்சில் | = | ஊன்முதலியவற்றை முன் ருசி பார்த்து நிவேதித்த எச்சிலை |
| து | = | உவப்புடனே யுண்டவராகிய |
| மிக்கும் | = | மேன்மையாக |
| அரவு | = | சர்ப்பாபரணத்தை |
| அணி | = | தரித்த |

| | |
|---|---|
| முடியான் | = முடியையுடைய பரமசிவனது |
| மகன் | = மைந்தனுமாகிய குமாரக்கடவுளினது |
| சேரடிக்கு | = சிறப்பையுடைய திருவடியைக் கருதிக்கொண்டே, |
| சிறு | = சிறிதான |
| உமிக்கும் | = குற்றுமியையாயினும் |
| பகிரா மரம் நிகர் வீர் | = பிறர்க்கிட்டுண்ணமனங் கூடாமன் மரம்போன் றிருப்பவரே! |
| சிதை | = அழிந்துபோவதும் |
| உயிர் | = பிராணனுக்கு |
| துச்சில் | = ஒதுக்கிடமுமாகிய இவ் வுடலின் கண் |
| துயி | = ஒருதும்ம லுண்டாகும் அக்காலையினும் |
| குமர! | = 'குமரனே! |
| சரணம் | = உனக்கடைக்கலம்' |
| என்னீர் | = என்று சொல்லுங்கள்! |
| உய்வீர் | = பிழைப்பீர்கள். |

நீர் - தோன்று எழுவாய், உய்வீர் - பயனிலை. ஏ - அசை.

(க-ரை) சிற்றுமியும் ஈயாமல் மரம்போன் றிருப்பவர்களே! நீங்கள் பிழைப்பதெப்படி? நீர் தும்முங்காலையிலாவது தினைப் புனத்தின்கண் வள்ளியம்மையினிடத்துத் தமது மாபையோதி நின்றவனும், கண்ணப்ப நாயனார் நிவேதித்த எச்சிலை யினிதாகக் கொண்ட பரமசிவன் மைந்தனுமாகிய கந்தசுவாமியின் திருவடியைக் கருதிக் 'குமரனே சரணம்' என்றீரானால் பிழைப்பீர்கள். (கூஎ)

சேரங்க ராக மறமோது திகிரி செங்கைகொண்ட
சேரங்க ராக மருகந்த தேசிக! செந்தினைமேற்
சேரங்க ராக தனகிரி தோய்கந்த! செந்தமிழ்நூற்
சேரங்க! ராக விநோதவென் பார்க்கில்லை தீவினையே.

(ப-ரை) சிரம் = 'கலப்பையையும்'
கரா = முதலையினது
சம் = தலையை
அற = அறும்படி
மோது = அமர் செய்த
திகிரி = சக்கரத்தையும்,
செம் = சிவந்த
கை = கரத்தில்
கொண்ட = தரித்திருக்கும்
சீரங்கர் = திருவரங்கத்தையுடையதிருமாலும்
ஆகமர் = ஆகமவேதத்தை யருளிய பரமசிவனும்
உகந்த = விரும்பத்தக்க
தேசிக! = அழகனே!
செம் = சிவந்த
தினைமேல் = தினைப்புனத்தில் வாழும்
சீர் = சிறந்த வள்ளி நாயகியினது
அங்கராக = சாந்தணிந்த
தனம் கிரி = தனமாகிய மலையை
தோய் = தழுவிய
கந்த! = குமாரக்கடவுளே!
செந்தமிழ் நூல் = செவ்விய தமிழ்ப் பாவலின்
சீரங்க! = சீர் முதலிய எட்டுறுப்புக்குரிய பாவலனே!
ராக விநோத! = கீதத்தி லுல்லாசனே!'
என்பார்க்கு = என்று நாடோறுந் துதிக்கின்றவர்கட்கு
தீவினை இல்லை = கொடிய வினை சோராது.

தீவினை - எழுவாய், இல்லை - பயனிலை. ஏ - அசை.

(க-ரை) 'கலப்பை யாயுதத்தையும், சக்காயுதத்தையு முடைய திருமால் மருகோனே! சுந்தரனே! தினைப்புனத்தில் வாழ்கின்ற

வள்ளி நாயகியைத் தழுவுங் கந்தனே! இயலிசை முதலிய தமிழ் நாற்குரிய விநோதனே!' என்று துதிப்பவர்கட்குத் தீவினை யில்லை. (சுஅ)

தீவினை யற்ற சினந்தி ரகத்துண்மெய்த் தீபநந்தந்
தீவினை யற்ற வகந்தா தெடுத்தனஞ் செந்தினைமேல்
தீவினை யற்ற புனமான் கொழுநன் செழுங்கநகத்
தீவினை யற்றவடி யார்க் கருள்பெருஞ் செல்வனுக்கே.

'(ப-ரை)

| | | |
|---|---|---|
| செம் | = | சிவந்த |
| தினைமேல் | = | தினைப்பயிர் விளைவில் |
| தீ | = | தீய்ந்து போகும் |
| வினை அற்ற | = | செய்கை யில்லாத |
| புன | = | புனத்தில் வாழும் |
| மான் | = | மான் போன்ற கண்ணையுடைய வள்ளியம்மைக்கு |
| கொழுநன் | = | நாயகனாகிய |
| செழும் | = | செழுமை தங்கிய |
| கனகத்தீவினை | = | பொன் மயமாய்ப் பிரகாசிக்கின்ற மோக்ஷ வுலகத்தை |
| அற்ற | = | பாச பந்தங்க ணீங்கிய |
| அடியார்க்கு | = | தமதடியார்கட்கு |
| அருள் | = | கொடுத்தருள்கின்ற |
| பெரும | = | பெரிய |
| செல்வனுக்கு | = | அருணிறைந்த செல்வனுக்கு |
| தீ | = | அக்கினியானவன் |
| வினையற்ற | = | தீக்ஷண்ணியமாகத் தகிக்கின்றதன் செய்கை யற்றதுபோல் |
| சினம் தீர் | = | கோப நீங்கிய |
| அகத்துள் | = | நமது சாந்த இருதயத்துள் |
| நந்தம் தீவினை | = | நம்முடைய தீவினையாகிய |
| அல் | = | இருளானது |
| தவ | = | கெடும்படி |

மெய் = உண்மையாகிய
தீபம் = ஞான விளக்கை
நந்தாது = அவிந்துபோகாமல்
எடுத்தனம் = ஏற்றி வைத்தோம்.

யாம் - தோன்றா எழுவாய், எடுத்தனம் - பயனிலை. ஏ-அசை.

(க-ரை) வளப்ப மிகுந்த தினைப்புனத்தின் வாழ்கின்ற வள்ளி யம்மைக்கு நாயகனும், பற்றற்ற அடியார்கட்கு மோக்ஷவுலகத்தை யளிப்பவனுமாகிய குமாரக்கடவுளுக்கு நமது சாந்த இருதயத் தகழியி லுண்மையாகிய ஞானவிளக்கை ஏற்றி வைத்தோம்.

செல்வந் திகழு மலநெஞ்ச மேயவன் றெய்வமின்னூர்
செல்வந் திகழு நமதின்மை தீர்க்கும்வெங் கூற்றுவற்குச்
செல்வந் திகழுந் திருக்கையில் வேறினை காத்தசெல்வி
செல்வந் திகழு மணவாள னல்குந் திருவடியே.

(ப-ரை) நெஞ்சமே = இருதயமே!
அவன் = அவாது
தெய்வ = தெய்வீகமாகிய
மின் = தெய்வயானை
ஊர் = ஏறி வருகின்ற
செல் = மேகவாகனமானது
வந்து = வந்து
இகழும் = (பிறரால்) இகழப்படும்
நமது = நம்முடைய
இன்மை = இல்லாமை யாவும்
தீர்க்கும் = நீக்கிவிடும்;
திருக்கையில் = (முருகக்கடவுளது)திருக்கரத்தின்
வேல் = வேலாயுதமானது
வெம் = கொடிய
கூற்றுவற்கு = யமனுக்கு நம்மேல் நடப்பதாகிய

செல் = நம்மேல் நடப்பதாகிய
வந்தி = கொடுமையை
கழும் = துடைத்துவிடும்;
தினை காத்த = தினைப்புனங் காவல்பூண்ட
செல்வி = வள்ளிநாயகியினது
செல்வம் = பெருஞ் சிறப்பாக
திகழும் = (நிறைந்த) பிரகாசிக்கின்ற
மணவாளன் = நாயகனாகிய கந்தசுவாமியானவர்
திருவடி நல்கும் = உனது திருவடித் தாமரையை நமக்குத் தந்தருள்வார்; (ஆதலால்)
கழுமலம் = குமாரக்கடவுளானவர் முன்சம்பந்தப் பிள்ளையா யவதரித்தருளிய சீகாழிப்பதியின்கண்
செல் = சென்று
வந்தி = வணக்கஞ் செய்.

நீ - தோன்றா எழுவாய், வந்தி - ஏவல் வினை, ஏ - அசை.

(க-ரை) நெஞ்சமே! தெய்வயானையினது வாகனமாகிய மேகம் நமது வறுமையைத் தவிர்க்கும்; குமாரக்கடவுளது வேலாயுதம் நமக்கு வரும் யமதண்டனையை நீக்கிவிடும்; வள்ளிநாயகிக்கு மணவாளராகிய கந்தசுவாமி நமது திருவடித்தாமரையைத் தந்தருளுவார்; ஆதலால், நீ அக் கடவுள் முன் சம்பந்தப்பிள்ளையா யவதரித்த சீகாழியிற் சென்று அவரை வணங்கு. (௧00)

கந்தரந்தாதி மூலமும் உரையும்
முற்றுப்பெற்றன.

---

உ

சிவமயம்

குகன் துணை



கந்ததிரந்தாயின்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி



செய்யுள் முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.

---

மனோரஞ்சினி பிரஸ், சௌகார்பேட்டை, மதராஸ்.

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,
நெ 4/34, நயினியப்ப நாயக்கன் வீதி, பார்க் டவுன் சென்னை.

# இந்நூலின் அமைப்புப் பின்வருமாறு

1. ஒவ்வொரு திருப்படைவீட்டுத் துதியின் மூலம் வரிக் கணக்கோடும் போடப்பட்டிருக்கின்றது.

2. ஷை துதியைச் சிறு வாக்கியங்களாக எடுத்து அந்வயப்படுத்திக் காட்டி, அதன் கீழ் ஷை வாக்கியம் இன்ன வரியைச் சார்ந்ததென்று காட்டப்பட்டிருக்கின்றது.

3. பிறகு, ஷை பதங்கள் ஒரே வரிசையாகவும், ஷை பதங்களின் பதப்பொருள் ஷை பதங்களுக்கு நேர்நேராகவும் போடப்பட்டிருக்கின்றன. ஷை பதவுரையையே பொழிப்புரையாகவும் படித்துக்கொள்ளுமாறு இப்போது நூல் அமைந்துள்ளது.

4. ஷை பதவுரையின் கீழ்ச் சிற்சில இடங்களில் உரைவிளக்கம் காட்டப்பட்டிருக்கின்றது.

5. பாடபேதங்கள் அந்தந்த இடங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. மேற்காட்டிய நூல் முழுதும், பழைய உரையையே பலரும் சிரமமின்றி வாசித்துக்கொள்ளுதற் பொருட்டுப் புதிய முறையிலமைத்து எழுதப்பட்டிருக்கின்றது.

திருமுருகாற்றுப்படை உரையை இதுவரையில் இந்தவிதமான அமைப்பில் எவரும் பதிப்பிக்கவில்லை. இந்த விதமான அமைப்பில் இந்நூல் வெளிவருவது இதுதான் முதன் முறையாகும். இதன் விலை
முருகப் பெருமான் திருவுருவப் படத்துடன் விலை அணு 0-8-0
உயர்ந்த கிளேஸ் பதிப்பு விலை அணு 0—12—0

ஔவையார் அருளிய விநாயகர் அகவல், சதுர்த்தி விரத மகிமை, பூஜாக்கிரமம், அருணகிரிநாதர் அருளிய விநாயகர் திரு அகவல், நக்கீரதேவர் அருளிய விநாயகர் திரு அகவல், கபில தேவர் அருளிய மூத்த நாயனர் இரட்டைமணிமாலை சுத்தப் பதிப்பு, (பாக்கெட் அளவு) 0—2—0.

ஸ்ரீ கந்தரனுபூதி மூலமும்,
ஆசிரியர் ஸ்ரீமான் சோ. வடிவேலு ச்செட்டியார் அவர்களியற்றிய
உரையும் 0—8—0. கிளேஸ் பதிப்பு 0—12—0.

—:o:—

மனோரஞ்சினி பிரஸ், சௌகார்பேட்டை, மதராஸ்.

## ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலையின் வெளியிடுகள்

| No. | Title | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | திருமுருகாற்றுப்படை மூலமும் பரிமேலழகர் உரையும் | 0 | 8 |
| 2. | கந்தரநுபூதி மூலமும் உரையும் | 0 | 8 |
| 3. | யஜுஸ் திரிகால சந்தியாவந்தன மந்திரம் (தமிழ்) | 0 | 6 |
| 4. | நாமாவளி கதம்பம் | 0 | 8 |
| 5. | ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர் அருள்மொழிகள் | 1 | 8 |
| 6. | ,, ,, 1004 உபதேச மொழிகள் | 2 | 0 |
| 7. | ,, ,, ஞானயோக ரஹஸ்யம் | 2 | 4 |
| 8. | ,, ,, வேதாந்த ரஹஸ்யம் | 2 | 0 |
| 9. | ,, ,, இராஜயோகமும், பதஞ்சலியோக சூத்திரமும் ஷடி சூத்ர வியாக்கியானமும் | 2 | 4 |
| 10. | ,, ,, ஸ்ரீ பதஞ்சலி மஹரிஷி யோக சூத்திர ,, வியாக்கியானம் தனி | 1 | 4 |
| 11. | ,, ,, எனது குருநாதர் | 0 | 8 |
| 12. | ,, ,, கிழக்கும் மேற்கும் | 0 | 8 |
| 13. | ,, ,, தற்கால இந்தியா | 0 | 10 |
| 14. | ,, ,, எதிரொலிகள் | 0 | 8 |
| 15. | ,, ,, வேதாந்த தத்துவம் | 0 | 8 |
| 16. | ,, ,, சிகாகோ பிரசங்கம் | 0 | 6 |
| 17. | ,, ,, அத்வைத சம்பாஷணைகள் | 0 | 8 |
| 18. | ஸ்ரீ ராமதீர்த்த பரமஹம்ஸ விஜயம் 1-ம் பாகம் | 1 | 8 |
| 19. | ,, ,, 2-ம் பாகம் | 3 | 12 |
| 20. | ஸ்ரீ சங்கரர் அத்வைத உபதேச பஞ்சரத்னம் | 0 | 6 |
| 21. | சச்சிதானந்த சிவம் | | 2 |
| 22. | மோக்ஷ சாதன ரகசியம் | 4 | 0 |
| 23. | பரமார்த்த போத வசன வினவிடை | 0 | 2 |
| 24. | ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸர் பிரஹ்மானந்த சம்பாஷணைகள் | 3 | 0 |
| 25. | கந்தரந்தாதி மூலமும் ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வார் உரையும் (புதிய முறையின்படி அச்சிட்டது) | 0 | 12 |

*C. M. & Sons Printers, Madras.*